# இறையனார்

என்ற

# அகப்பொருள்



# தெய்வப்புலமை நக்கீரனார்

அருளிய

உ ரை யு ட ன்

பூம்போது தோற்றிப்
பொருளென்னும்
நல்லிரும் தீந்தாது
நாறுதலால்—மல்லிகையின்

வண்தார் கமழ்தாமம்
அன்றே மலையாத
தண்தாரான் கூடல்
தமிழ்.'*

என, நல்லிசைப்புலவர் பொய்யா மொழிக்கு இலக்காக என்றும் நின்று இலகுறுவது நம் செந்தமிழ் மொழி. இதன்கண் மக்கட் பிறப்பின் பயனுன, அறம் பொருள் இன்பம் வீடுகளைத் தெற்றென மக்கள் அறிந்துய்ய அறிஞரால் ஆக்கிய நூல்கள்பல அணி செய்கின்றன. இவ்வரும்பெரும் நூல்கள் அகமும் புறமும் ஆகிய பொருள்களைக் கிளந்தெடுத்தோதுவன.

அகமென்பது, உள்ளத்தின்கண் நிகழ்வது; வெளிக்குத் தோன்றாதது. அது, பல்லன ஆயினும் உணர்ப்புவயின் அறிவ தன்றி இவ்வாறென வெளிக்கு எடுத்துரைத்தல் இயலாதது. அது மனத்தினாலறியும் மாண்புடையது. அதுவே, காதலுணர்வு. பருவம் வாய்ந்த ஆடவர் பெண்டிர் அகத்தே பூத்துமலரும் பொற்புடையது. இதனை அகம் என்றனர் ஆன்றோர். புறமென்பது, வெளியே புலனாகும் நிலைகள். அவை: போர்முறை, களியாடல், ஆடல் பாடல் முதலிய யாவும் ஆகும். இவைகளைப் பிறருக்குக் கட்புலன், செவிப்புலன்களுக்கு வெளியே தோன்றும்வண்ணம் காட்டக்கூடியதாகலான், இதனைப் புறம் என்றனர், புலத்துறைமுற்றிய நலத்தினர்.

இவ்வகம் புறம் ஆகிய பொருள்கள் இத்தன்மைத்தென விதந்தெடுத்து முற்றமுடியக்கிளத்தும் இலக்கணநூல், ஒல்காப் பெருமைத் தொல்காப்பியம். இதன்கண் அகப்பொருள் நிலையை மிக விரித்துணர்த்தியுள்ளனர். இத்தொல்காப்பியம் மழைமேகத்தால் மறைப்புறும் ஞாயிற்றைப் போல் சிலகால் அறிஞர் கைக்குக் கிட்டியும், பலகால் கிட்டாதும் மறைந்து அவ்வேடு கிடையாததாயிற்று. அக்காலையில் கற்றுத்துறை போய பேரறிஞராகிய புலவர்கள் தம் நெஞ்சக ஏட்டில் டீதித் தெழுதி வைத்து மாணவர்க்குப் பாடங் கற்பிக்கும் வாயிலாக இவ் அகப்பொருள் முதலியவற்றை உணர்த்திவருவாராயினர். அத்தகையாரும் பிற்காலத்து அருகலாயினர்.

அவ்வரிய காலத்தே மலர்ந்ததே களவியலெனப்* பெயரிய இறையனார் அகப் பொருள் என்னும் இவ் விலக்கணநூல். இஃது, இறைவனால் அருளிச்செய்து உதவப்பட்ட தென்பர்.. இது அறுபது நூற்பாக்களால் அமைந்தது. சுருங்கச்சொல்லி

---

*மதுரைக்காஞ்சி இறுதி வெண்பா.

# இறையனார் அகப்பொருள்

விளங்கவைக்கும் பெற்றித்தாய் மிளிர்கின்றது. கடல்போற் பரந்த அகப்பொருள் விரிவை அங்கைநெல்லியெனச் சுருக்கி விளக்குவது இவ்வரிய அகப்பொருள் நூல்.

இவ் வறுபான் நூற்பாவிற்கும் தெள்ளத் தெளிய விளக்கும் உரையொன்றமைந்துள்ளது. இவ்வுரை கடைச் சங்கத்தில் வீற்றிருந்த புலவர் பெருந்தகை நக்கீரனாரால் ஆக்கப்பட்டதென வும், அதனை உப்பூரி குடிகிழார் மகன் உருத்திர சன்மன் என்பான் கேட்டுச் சிறந்த உரையென ஒப்புக்கொள்ளப் பெற்ற தெனவும் இந்நூல், முதல்நூற்பா உரையகத்தே கூறப்பெற் றுள்ளது நோக்கத்தக்கது; அது:

"'ஐயனாவான் உருத்திரசன்மரைத் தரல்வேண்டும்' என்று வேண்டிக் கொடுபோந்து, வெளியது உடீஇ, வெண்பூச்சூட்டி, வெண் சாந்தணிந்து, கன்மாப்பலகை யேற்றி, இரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருளுரைப்ப, எல்லாரும் முறையே உரைப்பக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதன் இளநாகனார் உரைத்த இடத்து ஒரோ வழிக் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் நிறுத்தி, பின்னர்க் கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த இடத்துப் பதந்தொறும் கண்ணீர் வார்ந்து, மெய்ம் மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்ப ஆர்ப்பெடுத்து, 'மெய்யுரை பெற்றாம் இந்நூற்கு' என்றார்."*

என்பதாம்.

இவ்வுரைகொண்டு இந்நூலுக்கு மெய்ம்மை உரை காண்பார் இலராக, ஒவ்வொரு புலவர்களும் தத்தம் அறிவுத் திறங்கொண்டு அவர்தம் அறிவின் எல்லையளவுக்குக் கண்ட நுட்பத்தை உரைத்தாராக, அவ்வுரைகள் பொருத்தமின்மையை உருத்திரசன்மன் மூங்கையானுகலான், அவன் மெய்ப்பாட்டால் உணர்த்திப் பின்னர் நக்கீரனுர் கண்ட வுரைக்கு மட்டும் சிறந்த தென்று தன் மெய்ப்பாட்டினுல் காட்ட, அது கொண்டு இவ் வுரையினையே சிறந்ததெனச் சங்கப்பேரவையினர் ஏற்றுக் கொண்டனரென்று அறியக்கிடக்கின்றது.

இவ்வாறமைந்த உரையைக் கேட்ட காலம் கடைச்சங்க காலத்து, உக்கிரப்பெருவழுதி அவைக்களம் எனக் குறிப்பிடப் பெற்றுள்ளதால், ஏறக்குறைய இரண்டாயிரம் யாண்டெனை ஊகிக்கலாம். வீளமிக்க சிறந்த உரை. காட்டாக இரண்டாவது சூத்திரத்துக்கு அவர் விளக்கங் கொடுத்துச் செல்லும் ஆற்றொழுக்குப் போன்ற நடை, கற்கக்கற்க இனிமை தருவதாக இயைந்துள்ளது. இவர் களவு கற்பு என்னும் கைகோள் இரண்டில் களவு என்பதற்கு (பக்கம்: கூ) விளக்கியிருக்கும் விளக்கவுரை மிக்க சிறப்புடையது. இன்னும் இவர்

*இந்நூல், பக்கம்: அ.

5,

உரையில் இலக்கணக் குறிப்புக்கள் மேற்கோட்பாட்டுக்கள் முதலியனவும் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. இவ்வுரையின் சிறப்பு அறிஞர்க்கு நவிற்றொறும் நயங்காட்டுவது. ஆனால் நக்கீரரால் உரையெழுதப் பெற்றதோ என, ஐயுறற்கு இடனுக இருக்கின்றது. என்னையெனின், நக்கீரர் காலம் கடைச்சங்க காலம் என்பது யாவரும் நன்கறிந்த உண்மை. கோவைகள் எழுந்த காலம், பிற்காலம். கோவைகள் யாவும் கட்டளைக் கலித்துறையால் அமைந்தன. தொல்காப்பியர் காலத்திலோ அதற்குப் பிற்பட்ட காலத்திலோ கட்டளைக் கலித்துறை பயில வில்லை. தொல்காப்பியச் செய்யுளியலில் இக்கலித்துறைக்கு விதியும் அமைக்கவில்லை. சங்ககால நூல்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய நூல்களில் யாண்டும் இப் பா வரக் காண்கிலோம். அவ்வாறிருப்ப இந்நூலின் உரைக்குக்கீழ் உதார ணத்துக்குக் கட்டளைக் கலித்துறையானியன்ற கோவைத்துறை கொண்ட பாடல்கள் காட்டப் பெற்றுள்ளன. அன்றியும், முதற் சூத்திர உரைக்கண், (பக்கம்: அ) 'மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனால் உரை கண்டு, குமார சுவாமியாற் கேட்கப்பட்டது என்க' என்று கூறுவதையும், ஏழாம் சூத்திரத்து உரைக்கண், விளக்கம் உரைக்கும்போது செலவுச்சொல் கொடுத்துக் கூறவேண்டு மென்பதற்குத் தாம் பாடிய பாடலாக (அகம்: ௩௬) பாடலில் வந்துள்ள 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' என்ற அடியை யெடுத்துக் காட்டி 'என்று சான்றோர் சொல்லி யது' (பக்கம்: எ௬) என்று கூறியிருப்பதையும் நோக்கினல், இவர் தம்மையே இவ்வாறு மாந்திக் கூறுவரோ என்னும் எண்ணம் உந்த நக்கீரர் உரை காணே? என்ற ஐயம் எழ

கின்றது. ஆராய்ச்சி யுலகு இதனை ஆய்ந்து தெளிக.

இதில், சங்ககாலத்துப் பயிலாத வடசொற்கள், பிற்காலத்து வழக்காற்றிற்கு வந்தன, யாண்டும் விரவிக்கிடத்தலையும் ஆங்காங்கே காணலாம். காட்டாகச் சில காட்டுதும்: 'சிட்டரை எல்லாம் கூவி' (பக்கம்: சு) என்பதில், 'சிட்டர்' எனவும், 'பிராமணன் சிந்திப்பான்' (பக்கம்: எ) என்பதில், 'பிராமணன்' எனவும், 'நமக்கோர் காரணிகனை யான் எங்ஙனம் நாடுவேன்' (பக்கம்: அ) என்பதில், 'காரணிகன்' எனவும், 'நக்கீரனால் உரைகண்டு குமாரசுவாமியாற் கேட்கப்பட்டது என்க,' (பக்கம்: அ) என்பதில், 'குமாரசுவாமி' எனவும், 'கொழுவும் புரளியும் முத்திர புரீடங்களும் என்று இவற்றது இயைபு' (பக்கம்: க0) என்பதில், 'முத்திர புரீடம்' எனவும், 'கணவனொடு செத்தவர் சுவர்க்கம் புகுவார்' (பக்கம்: கசு) என்பதில், 'சுவர்க்கம்' எனவும், 'பார்ப்பானுகலின் பன்மை வாசகத்தாற் சொன்னரென்பது' என்பதில்,



'வாசகம்' (பக்கம்: ருசு) எனவும், மீண்டும் இந்நூன் முழுதும் பெருவாரியிற்றான வடசொற்கள் பயின்றுவரக் காண்டலானும் ஐயமின்றித் தெளிய இடனாகின்றது. எனவே, நக்கீரனாரே இவ்வுரை கண்டார் எனத் துணிதற்கு நடுகின்ற நெஞ்சம் நடுங்கும். அவர் அருளிய 'திருமுருகாற்றுப்படை,' 'நெடுநல்வாடை' போன்ற தனி நூல்களினும், மற்ற அகம், புறங்களில் இடம் பெற்றுள்ள தனிப்பாடல்களினும் நூற்றிற்கு ஒரிரு விழுக்காடுகூட வேற்றுச் சொல்லில்லை. அனைத்தும் தனித் தமிழ் வளஞ்சான்ற தூய செந்தமிழ்ச் சொற்களே என்பதும் தெளிக.

இத்தகைய புலவர் பெருமான் 'மணிமிடை பவளம்' போல் தமிழிற் பிறசொற் பெய்து உரை வரையார். எவ்வாறோ இவ்வுரை அவர் பெயரால் நிலவுகின்றது.

" நக்கீரரே உரை வகுத்ததாக இருப்பின், 'நக்கீரனாரால் உரை கண்டு' எனவும், 'என்று சொல்லினர் சான்றோர்' எனவும் குறிப்பிடார்; குறிப்பிடுவது அவர்தம் சிறப்புக்குத் தற்புகழ்ச்சி யாகும். கோவைப்பாடல்கள் முற்கூறியவாறு அவர் காலத்து இல்லாதன. ஆகவே, பிற்காலத்து யாரோ உரையை ஒட்டி இயற்றிச் சேர்த்த துறைப்பாடலே என்று ஐயமின்றிக் கொள்ள லாம்." அஃது, எவ்வாறாயினும் ஆகுக. உரையும் நூலும் சிறந்தன என்பது மட்டும் ஒருதலை.

இத்தகைய நூற் சிறப்பும், உரைச் சிறப்பும் கொண்டுள்ள இந்நூல், தமிழ்கூறு நல்லுலக மாந்தர்க்குக் கற்றுப்பயன்பெறும் திருநூலாக இலங்கி மிளிர்கின்றது. இந்நூல் இதற்குமுன் பலரால் திருத்தி வெளியிடப் பெற்றிருப்பினும் இப்பதிப்பு பல படிகளைக் கொண்டு பார்த்துச் செப்பனிட்டுச் சூத்திரங்களினும், மேற்கோட் செய்யுட்களினும் கடும்புணர்ப்புக்களைப் பிரித்துக் கற்பார் எளிதிற் பொருளுணர்ந்துகொள்ளுமாறு அமைத்து வெளியிட்டுள்ளோம். இதன்கண் அரும்பொருள் அகரவரிசை யும் நூல் இறுதியிற் சேர்த்துள்ளோம்.

இதன்கண் வரும் மேற்கோள் களித்துறைப்பாடல்கள் 'பாண்டிக்கோவை' என, வழங்கப்பெறுகின்றது. அதனைத் தனி நூலாக்கிப் பொருள்விளக்கத்துடன் விரைவில் வெளியிட முயன்றுள்ளோம்.

**இவ்வரிய சீரிய நூலைத்**

**தமிழுலகம் வாங்கிக் கற்றும்**

கற்பித் . தும் பெரும்பயன் எய்துமென விழைகின்றோம்.

சைவசித்தாந்த

நூற்பதிப்புக் கழகத்தார்.

## இறையனார் அகப்பொருள்

### சூத்திர முதற்குறிப்பு

| வரிசை என் | முதற் குறிப்பு |
| --- | --- |

1. அதுவே, தானே
2. அம்பலும் அலரும்
3. அரசர் அல்லா
4. அல்லகுறிப் படுதலும்
5. அவ்வியல்பல்லது
6. அவருள், தாயறி
7. அவற்றுள், எச்சமும்
8. அவற்றுள், ஓதலும்
9. அவன்வயின் களப்பின்

10. அன்பி னைந்திணைக்
11. ஆங்குணர்ந் தல்லது
12. ஆங்ஙனம் புணர்ந்த
13. ஆறின் ஞைமையும்
14. இரந்துகுறையுறாது
15. இரவுக்குறியே
16. இரவுமனை இகந்த
17. உணர்ப்புவயின் வாரா
18. உள்ளத்துணர்ச்சி
19. எல்லா வாயிலும்
20. ஓதல் காவல்

21. களவினுள் தவிர்ச்சி காப்பு
22. " " வரைவின்
23. " " கிழவோற்
24. களவு கற்பெனக்
25. களவு வெளிப்படா
26. கற்பினுள் துறவே
27. கற்பினுட் பிரிந்தோன்
28. காதற் பரத்தை
29. காப்புக் கைமிக்குக்
30. காம மிக்க
31. கிழவோன் முன்னர்க்
32. குறியெனப் படுவ
33. குறியுறுங் கிழவனை

# அகரவரிசை

| | | |
|---|---|---|
| ... | 1 | 1 |
| ... | 74 | 8 |
| ... | 47 | 3 |
| ... | 152 | 31 |
| ... | 65 | 6 |
| ... | 113 | 19 |
| ... | 115 | 21 |
| ... | 186 | 50 |
| ... | 78 | 10 |
| ... | 193 | 53 |
| ... | 157 | 35 |
| ... | 100 | 16 |

| | | |
|---|---|---|
| ... | 154 | 32 |
| ... | 155 | 33 |
| ... | 208 | 60 |
| ... | 132 | 24 |
| ... | 157 | 34 |
| ... | 181 | 44 |
| ... | 171 | 40 |
| ... | 139 | 29 |
| ... | 143 | 30 |
| ... | 183 | 47 |
| ... | 104 | 18 |
| ... | 84 | 12 |

இல்லைக்

36. சிறைப்புறம்

குறியா

37. சொல்லே

குறிப்பே

38. தந்தை தன்னையர்

39. தன்னுட் குறிப்பினை

40. இணையே

கைகோள்

41. தோழிக் குரியன

42. நாடும் ஊரும்

43. நிலம்பெயர்ந்

துறையும் நிலை

44. நிலம்பெயர்ந்
துறையும் எல்லாப்

45. பகற்குறி தானே

46. பட்ட பின்றை

47. பரத்தையிற்
பிரிந்த

48. பரத்தையிற்
பிரிவே

49. பிரிவின் நீட்டம்

50. புகழும்
கொடுமையும்

51. புணர்ந்த பின்றை

52. முற்படக் கிளந்த

53. முற்படப்
புணரா த

54. முன்னுற
உணர்தல்

55. முன்னுற
உணரினும்

56. வன்புறை குறித்த

57. வெளிப்படை
தானே

58. வெளிப்பட்ட
பின்றையும்

59. வேந்தர்க்
குற்றுழிப்

| | | |
|---|---|---|
| ... | 197 | 55 |
| ... | 203 | 58 |
| ... | 137 | 28 |
| ... | 82 | 11 |
| ... | 198 | 56 |
| ... | 95 | 14 |
| ... | 184 | 48 |
| ... | 188 | 51 |
| ... | 190 | 52 |
| ... | 114 | 20 |
| ... | 133 | 25 |

| | | |
|---|---|---|
| ... | 179 | 43 |
| ... | 178 | 42 |
| ... | 176 | 41 |
| ... | 182 | 45 |
| ... | 62 | 5 |
| ... | 204 | 59 |
| ... | 99 | 15 |
| ... | 68 | 7 |
| ... | 75 | 9 |
| ... | 196 | 54 |
| ... | 135 | 26 |

என்ற

## இறையனர் அகப்பொருள்



க.

# களவு

சூத்திரம் - க

அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்கம் என்மனர் புலவர்.

என்பது சூத்திரம்.

## பாயிரம்

எந்நூல் உரைப்பினும்

அந் நூற்குப் பாயிரம்

உரைத்து உரைக்கற்பாற்று.

என்னை,

'ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே'

என்பதாகலானும், 'பருப்பொருட்டாகிய பாயிரங்கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்கும்' என்பதாகலானும், பாயிரம் உரைத்து [1]உரைக்க என்பது மரபு. என் போலவோ எனின், 'கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமதுபோல' என்பது.

பொதுப்பாயிரம்
சிறப்புப்பாயிரம்

அப்பாயிரந்தான் இருவகைப்படும், பொதுப்பாயிரமும் சிறப்புப்பாயிரமும் என. அவற்றுள் பொதுப்பாயிரம் என்பது எல்லா நூல்முகத்தும் உரைக்கப்படுவது; சிறப்புப்பாயிரம் என்பது தன்னால் [2]உரைக்கப்படும் நூற்கு இன்றியமையாதது.

---

(பாடம்) 1. உரைக்க வேண்டும். 2. உரைக்கின்ற.

1. அன்பொடு புணர்ந்த ஐந்திணை

2

இறையனார் அகப்பொருள்

[களவு

பாயிரத்தின் இன்றியமையாமை

பாயிரம் என்ற சொற்குப் பொருள் யாதோ எனின், புறவுரை என்றவாறு. ஆயின், நூல் கேட்பான் [1]புகுந்தே நூல் [2]கேளாது புறவுரை [3]கேட்டு [4]என்பயன் எனின், நூற்குப் புறனுக வைத்தும் நூற்கு இன்றியமையாதது, ஆதலின் என்க. என்போலவோ எனின், கருவமைந்த மாநகர்க்கு உருவமைந்த வாயில்மாடம் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்க மாகிய திங்களும் ஞாயிறும் போலவும், தகை மாண்ட நெடுஞ் சுவர்க்கு வகைமாண்ட பாவை போலவும் என்பது. ஆகலின் பாயிரங் கேட்டே நூல் கேட்கப்படும்.

# பொதுப்பாயிரம்

அவற்றுள், அப் பொதுப்பாயிரந்தான் நான்கு வகைப் படும்: அவை, ஈவோன் தன்மையும், ஈதலியற்கையும், கொள் வோன் தன்மையும், கோடல்மரபும் என.

என்னை,

‘ஈவோன் தன்மை யீத

லியற்கை

கொள்வோன் தன்மை

கோடல் மரபென
ஈரிரண் டென்ப[5]
பொதுவின் இயற்கை'

என்பதாகலின்.

ஈவோன் தன்மை என்பது - ஆசிரியனது தன்மை என்றவாறு;

ஈதலியற்கை என்பது - அவன் உரைக்கும் முறைமை என்றவாறு;

கோள்வோன் தன்மை

என்பது - மாணாக்கனது

தன்மை

என்றவாறு;

கோடல்மரபு என்பது

- அவன் கேட்குங்

முறைமை

என்றவாறு.

அவை யெல்லாம்

விரித்துரைப்பிற் பெருகும்; விரிந்த

நூலிற் கண்டுகொள்க.

இனிச் சிறப்புப்பாயிரம் எட்டு வகைப்படும். அவை யாவையோ எனின், ஆக்கியோன் பெயரும், வழியும், எல்லையும்,

---

(பாடம்) 1. புகுந்தோன். 2. கேளாமுன். 3. கேட்பது. 4. என்னையோ. 5. இயல்புணர்ந்தோரே! 6. முடிந்த.



நூற்பெயரும், யாப்பும், நுதலிய பொருளும், கேட்போரும், பயனும் என இவை.

என்னை,

'ஆக்கியோன் பெயரே
வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே
நுதலிய பொருளே
கேட்போர் பயனே
டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத்
தியல்பே' என்றாராகலின்.

இவற்றொடு, காலமும்
களனும் காரணமும்

கூட்டிப் பதினொன்று
என்பாரும் உளர்;
என்னை,

'காலங் களனே காரணம்
என்றிம்
மூவகை யேற்றி
மொழிநரும் உளரே'
என்றாராகலின்.

ஆக்கியோன் பெயர் என்பது— நூல் செய்த ஆசிரியன் பெயர் என்றவாறு; இந்நூல் செய்தார் யாரோ எனின், மால் வரை புரையும் மாடக்கூடல் ஆலவாயிற் பால்புரை பசுங்கதிர்க் குழவித்திங்களைக் குறுங்கண்ணியாகவுடைய அழலவிர் சோதி அருமறைக் கடவுள் என்பது.

வழி என்பது—இந்நூல் இன்னதன் வழித்து என்பது. இது, வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவனாற்[1] செய்யப் பட்டதாகலான் வழிநூல் என்று சொல்லப்படாது, முதனூல் எனப்படும் என்பது.

எல்லை என்பது—இந்நூல் இன்ன எல்லையுள் நடக்கும் என்பது. இந்நூல் எவ்வெல்லையுள் நடக்குமோ எனின், வடக்கு வேங்கடம், தெற்குக் குமரி, கிழக்கும் மேற்குங் கடல் எல்லையாக நடக்கும் என்பது.

என்னை,

'வடக்குந் தெற்குங்
குடக்குங் குணக்கும்
வேங்கடம் குமரி
தீம்புனற் பௌவமென்
றந்நான் கெல்லை அகவயிற் கிடந்த
நூலதின் முறையே வாலிதின் விரிப்பின்'

எனவும்,

'வடவேங்கடம்
தென்குமரி

ஆயிடைத்

தமிழ்கூறு நல்லுலகத்து'

(பாடம்) 1. செய்யப்பட்டமையான்.

4 இறையனார்

அகப்பொருள்

[களவு

எனவும் காக்கைபாடினியாரும்

தோல்காப்பிய[1]னாரும் சொன்ன

ராகலின் என்பது.

நூற்பெயர் என்பது — நூலது பெயர் என்றவாறு. நூல் பெயர்பெறுமிடத்துப் பல்விகற்பத்தாற் பெயர்பெறும்; என்னை, செய்தானாற் பெயர்பெறுதலும், செய்வித்தானாற் பெயர் பெறுதலும், இடுகுறியாற் பெயர்பெறுதலும், அளவினாற் பெயர்பெறுதலும், சிறப்பினாற் பெயர்பெறுதலும் என்க.

செய்தானாற் பெயர்பெற்றன: அகத்தியம், தொல்காப்பியம் என இவை.

செய்வித்தானாற் பெயர்பெற்றன: சாதவாகனம், இளந்திரையம் என இவை.

இடுகுறியாற் பெயர்பெற்றன: நிகண்டு, கோட்டுத் தண்டு என இவை.

நூல், கலைக்.

அளவினாற் பெயர்பெற்றது:

## பன்னிருபடலம் என்பது.

சிறப்பினாற் பெயர்பெற்றது: களவியல் என்பது; என்னை, களவு கற்பு என்னுங் கைகோள் இரண்டனுள் களவினைச் சிறப்புடைத்தென்று வேண்டும் இவ்வாசிரியன்.

என்னை,

'முற்படப் புணராச் சொல்லின் மையிற்
கற்பெனப் படுவது களவின் வழித்தே' (இறை - கரு)

என்று வேண்டுதலின். கற்பு, களவுபோல ஒருதலையான அன்பிற்று அன்று.

இனி, யாப்பு என்பது—நூல் யாப்பு, நூல் யாக்குமிடத்து நான்கு வகையால் யாக்கப்படும்; தொகுத்தும், விரித்தும், தொகைவிரியாகவும், மொழிபெயர்த்தும் என.

என்னை,

'தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே' (மரபியல், கூஅ)

என்றாராகலின்.

அவற்றுள், இது தொகுத்தியாக்கப்பட்டது; என்னை, உலகத்து நடக்கும் அகப்பொருட் செய்யுளிலக்கணம் எல்லாம் இவ்வாறுபது சூத்திரத்துள்ளே தொகுத்தானாகலின் என்பது.

(பாடம்) 1. தொல்காப்பியத்துக்குச் சிறப்புப்பாயிரங் கூறிய பனம்பாரனாரும். 2. புணராதசொல் லின்மையிற்.



இனி, நுதலியபொருள் என்பது—நூற்பொருளைச் சொல்லுதல் என்பது. இந்நூல் என் நுதலிற்றோ வெனின், தமிழ் நுதலிற்று என்பது.

கேட்போர் என்பது—இன்னார் கேட்டார் என்பது. இந்நூல்கேட்டார் யாரோ எனின், குற்றமுடைய நூலாயினன்றே குற்றமின்மை ஆராயவேண்டுவது; இது முனைவன் தன்னாற் செய்யப்பட்ட நூலாகலான் [1]குற்றமின்றே; [2]இன்மையிற் கேட்டாரையும் இன்றென்பது. இன்றேயெனினும், உரை நடந்து வாராநின்றமை நோக்கிக் கேட்டாரையும் உடைத்தென்பது. யாரோ கேட்டார் எனின், மதுரை உப்பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மன் என்பது. அவன் கேட்டற்குக் காரணஞ் சொல்லுதும் :

## முச்சங்க வரலாறு

தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கம் இரீஇயினர் பாண்டியர்.

அவருள் தலைச்சங்கம் இருந்தார் அகத்தியனாரும், திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், [3]முரிஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனும் என இத் தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்து ஒன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றி யாண்டு சங்கம் இருந்தார் என்பது. அவர்களைச் சங்கமிரீஇயினார் காய்சினவழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்ப தின்மர் என்ப. அவருள் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப் பட்ட மதுரை என்ப. அவர்க்கு நூல் அகத்தியம் என்ப.

---

இனி, இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், தொல்காப் பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன் மாறனும், துவரைக் கோமானும், கீரந்தையும் என இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்து எழுநூற்றுவர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன கலியும், [4]குருகும், வெண்டாளியும், [5]வியாழமாலை அகவலும்

(பாடம்) 1. குணமின்மை. 2. இன்மையின். 3. முரஞ்சியூர். 4. குருகுவேண்டாளியும். 5. அகவலும்.

6

# இறையனார் அகப்பொருள்

## [களவு

என இத் தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசைநுணுக்கமும், பூதபுராணமும் என இவை. அவர் மூவாயிரத்து எழுநூற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப. அவரைச் சங்கம் இரீஇயினார் வெண்தேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவியரங்கேறினார் ஐவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்து என்ப. அக்காலத்துப்போலும் பாண்டியனாட்டைக் கடல்கொண்டது.

இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங் குன்றூர் கிழாரும், இளந்திருமாறனும், மதுரை ஆசிரியர் நல்லந்துவனாரும், மதுரை மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார்நக்கீரனாரும் என இத் தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புற நானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் என்று இத் தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது [1]ஆயிரத்து எண்ணூற்று ஐம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்க மிரீஇயினார் கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங் கேறினார் மூவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரை என்ப.

# களவியலின் வரலாறு

அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது. செல்லவே, பசிகடுகுதலும், அரசன் சிட்டரையெல்லாங் கூவி, வம்மின், யான் உங்களைப் புறந்தரகில்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர் நுமக்கு அறிந்தவாறு புக்கு, நாடு நாடாயின ஞான்று என்னை [2]யுள்ளிவம்மின் என்றான். என, அரசனை விடுத்து எல்லாரும் போயின பின்றைக், கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர், நாடு மலிய மழை பெய்தது. பெய்த பின்னர், அரசன், 'இனி நாடு நாடாயிற்றாகலின், நூல்வல்லாரைக் கொணர்க' என்று எல்லாப் பக்கமும் ஆட்போக்க, எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும்

(பாடம்) 1. ஆயிரத்துத் தொள்ளாயிரத்தைம்பது என்பாரும் உளர்.

# 2. யுள்ளுமின்.



யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, 'பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேம்' என்று வந்தார். வர அரசனும் புடைபடக் கவன்று 'என்னை, எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது [1]பொருளதிகாரத்தின்பொருட்டன்றே. பொருளதிகாரம் பெறேமேயெனின், இவை பெற்றும் பெற்றிலேம்' எனச் சொல்லாநிற்ப, மதுரை ஆலவாயில் அழலிறக்கடவுள் சிந்திப்பான்: 'என்னை பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று; அதுதானும் ஞானத்திடைய தாகலான், யாம் அதனைத் தீர்க்கற்பாலம்' என்று, இவ்வறுபது சூத்திரத்தையுஞ் செய்து மூன்று செப்பிதழகத்து எழுதிப் பீடத்தின் கீழிட்டான்.

இட்டபிற்றைஞான்று, தேவர்குலம் வழிபடுவான், தேவர் கோட்டத்தை எங்குந் துடைத்து, நீர் தெளித்துப் பூவிட்டுப் பீடத்தின்கீழ் என்றும் அலகிடாதான் அன்று [2]தெய்வதத்துக் குறிப்பினன், 'அலகிடுவென்' என்று, உள்ளங்குளிர அலகிட்டான்; இட்டாற்கு அவ்வலகினோடும் இதழ் போந்தன. போதரக், கொண்டுபோந்து நோக்கினாற்கு வாய்ப்புடைத்தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப், பிராமணன் சிந்திப்பான்: 'அரசன் பொருளதிகாரம் இன்மையிற் கவல்கின்றான் என்பது கேட்டுச் செல்லாநின்றது உணர்ந்து நம்பெருமான் அருளிச் செய்தானாகும்' என்று தன் அகம் புகுதாதே, கோயிற் றலைக்கடைச் சென்று நின்று, கடைகாப்பார்க்கு உணர்த்தக், கடைகாப்பார் அரசற்கு உணர்த்த, அரசன், 'புகுதக' எனப் பிராமணனைக் கூவச், சென்று புக்குக் காட்ட ஏற்றுக்கொண்டு நோக்கிப், '<u>பொருளதிகாரம்</u>! இது நம்பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்தானாகற்பாலது!' என்று, அத்திசை நோக்கித் தொழுதுகொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவித்து, 'நம்பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்த பொருளதிகாரம், இதனைக் கொண்டுபோய்ப் பொருள் காண்மின்' என அவர்கள் அதனைக் கொண்டுபோந்து கல் மாப்பலகை ஏறியிருந்து ஆராய்வுழி, எல்லாரும் தாந்தாம் உரைத்த உரையே நல்லதென்று சில நாளெல்லாஞ் சென்றன.

### களவியல் உரை கண்டமை

செல்ல, 'நாம் இங்ஙனம் எத்துணை உரைப்பினும் ஒருதலைப் படாது; நாம் அரசனுழைச் சென்று, நமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும் என்று கொண்டுபோந்து, அவனாற் பொருளெனப் பட்டது பொருளாய், அன்றெனப்பட்டது அன்றாய் ஒழியக்

(பாடம்) 1. பொருளாய்வின். 2. தெய்வத்தவக்.

8

# இறையனார் அகப்பொருள்

## [களவு

காண்டும்' என்று, எல்லாரும் ஒருப்பட்டு, அரசனுழைச் சென்றார். அரசனும் எதிர்சென்று, 'என்னை, நூற்குப் பொருள் கண்டீரோ?' என, 'அது காணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும்' என, 'போமின், நுமக்கோர் காரணிகனை யான் எங்ஙனம் நாடுவேன்! நீயிர் நாற்பத்தொன்பதின்மர் ஆயிற்று, நுமக்கு நிகராவார் ஒருவர் 'இன்மையின் அன்றே' என்று அரசன் சொல்லப், போந்து, கல்மாப் பலகை ஏறியிருந்து, 'அரசனும் இது சொல்லினன், யாம் காரணிகனைப் பெறுமாறு என்னைகொல்' என்று சிந்திப்புழி, சூத்திரஞ் செய்தான் ஆலவாயில் அவிர்சடைக் கடவுளன்றே, அவனையே காரணிகனையுந் தரல்வேண்டும் எனச் சென்று வரங்கிடத்தும் என்று வரங்கிடப்ப, இடையாமத்து, 'இவ்வூர் உப்பூரி குடிகிழார் மகனுவான் உருத்திரசன்மன் என்பான், பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான், ஒரு மூங்கைப்பிள்ளை உளன்; அவனை அன்னனென்று இகழாது கொண்டுபோந்து, ஆசனத்தின்மேல் இரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருள் உரைத்தாற் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும், மெய்யாயின உரை

கேட்டவிடத்து; மெய்யல்லா உரை கேட்டவிடத்து வாளா இருக்கும்; அவன் குமார தெய்வம். அங்கோர் சாபத்தினல் தோன்றினன்' என முக்கால் இசைத்த குரல் எல்லார்க்கும் உடன்பாடாயிற்று; ஆக, எழுந்திருந்து, தேவர்குலத்தை வலங்கொண்டு போந்து, உப்பூரி குடிகிழாருழைச் சங்கமெல்லாஞ் சென்று, இவ்வார்த்தை யெல்லாஞ் சொல்லி, 'ஐயனுவான் உருத்திரசன்மனைத் தரல்வேண்டும்' என்று வேண்டிக் கொடுபோந்து, வெளியது உடீஇ, வெண்பூச் சூட்டி, வெண்சாந்து அணிந்து, கல்மாப் பலகையேற்றிக் கீழிருந்து சூத்திரப் பொருள் உரைப்ப, எல்லாரும் முறையே பொருளுரைப்பக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிளநாகனுர் உரைத்தவிடத்து ஒரோவிடத்துக் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் நிறுத்தி, பின்னர்க் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் உரைத்தவிடத்துப் பதந்தொறுங் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்ப, ஆர்ப்பெடுத்து, 'மெய்யுரை பெற்றும் இந்நூற்கு!' என்றூர்.

*"அதனல், உப்பூரி குடிகிழார் மகனுவான் உருத்திரசன்மனுவான் செய்தது இந்நூற்கு உரை என்பாரும் உளர்; அவர் செய்திலர், மெய்யுரை கேட்டார் என்க. மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனுரால் உரை கண்டு, குமாரசுவாமியாற் கேட்கப்பட்டது என்க. இனி உரை நடந்து வந்தவாறு சொல்லுதும் :'

---

(பாடம்) 1. இம்மையின் இன்றே.

* இவ்விடத்தை நோக்க இவ்வுரையை நக்கீரர் செய்திருக்க இயலாது என்பது நன்கு விளங்குதல் காணலாம்.

7

# இறையனார் அகப்பொருள்

9

## உரை நடந்துவந்த முறை

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தம் மகனார் கீரங்கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் தேனூர்கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங்கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவனார்க்கு உரைத்தார்; அவர் மணலூராசிரியர் புளியங்காய்ப் பெருஞ்சேந்தனார்க்கு உரைத்தார்; அவர் செல்லூராசிரியர் ஆண்டைப் பெருங் குமாரனார்க்கு உரைத்தார்; அவர் திருக்குன்றத்தாசிரியர்க்கு உரைத்தார்; அவர் மாதளவனார் இளநாகனார்க்கு உரைத்தார்; அவர் முசிறியாசிரியர் நீலகண்டனார்க்கு உரைத்தார். இங்ஙனம் வருகின்றது உரை.

பயன் என்பது, இது கற்க இன்னது பயக்கும் என்பது. இது கற்க இன்னது பயக்கும் என்பது அறியேன், யான் நூற் பொருள் அறிவல் என்னுமே யெனின், சில்லெழுத்தினுன் இயன்ற பயனறியாதாய், பல்லெழுத்தினுன் இயன்ற நூற் பொருள் யாங்ஙனம் அறிதியோ எனப்படும்; ஆகலின், இன்னது பயக்கும் என்பது அறியல்வேண்டும். என்பயக்குமோ இது கற்க எனின், வீடுபேறு பயக்கும் என்பது.

களவு என்றதன் காரணம்

என்னை, இது களவியலன்றே, இது கற்க வீடுபேறு பயக்குமாறு என்னை, களவு கொலை காமம் இணைவிழைச்சு என்பன வன்றோ சமயத்தாரானும் உலகத்தாரானும் கடியப்பட்டன. அவற்றுள் ஒன்றன்றுலோ இது எனின், அற்றன்று. களவு என்னுஞ் சொற்கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என் னுஞ் சொற்கேட்டுக் காமம் தீதென்பதூஉம் அன்று; மற்று அவை நல்ல ஆமாறும் உண்டு; என்னை, ஒரு பெண்டாட்டி தம ரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவல் என்னும் உள்ளத்தளாய் நஞ்சுகூட்டி வைத்து, விலக்குவாரை இல்லாதபோழ்து உண்பல் என்று நின்றவிடத்து, அருளுடையானொருவன் அதனைக்கண்டு, இவள் இதனை உண்டு சாவாமற் கொண்டுபோய் உகுப்பல் என்று, அவளைக் காணுமே கொண்டுபோய் உகுத்திட்டான்; அவளும் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்றுள்; அது காணளாய்ச் சாக்காடு நீங்கினள். அவன் அக்களவினுன் அவளை உய்யக்கொண்டமையின் நல்லூழிற் செல்லும் என்பது. மற்றும் இதுபோல்வன களவாகா, நன்மை பயக்கும் என்பது.

இனிக் காமம் நன்றுமாறும் உண்டு. சுவர்க்கத்தின்கண் சென்று போகந்துய்ப்பல் என்றும், உத்தரகுருவின்கண் சென்று போகந்துய்ப்பல் என்றும், நன்ஞானங் கற்று வீடுபெறுவல்

# இறையனார் அகப்பொருள்

## [களவு

என்றும், தெய்வத்தை வழிபடுவல் என்றும் எழுந்த காமம் கண்டாயன்றே? மேன்மக்களானும் புகழப்பட்டு, மறுமைக்கும் உறுதி பயக்கும் ஆதலின், இக் காமம் பெரிதும் உறுதியுடைத்து என்பது. உறுதி உடைத்தாமாறு: அறுவகைப்பட்ட பாசாண்டிகரும் இணைவிழைச்சுத் தீதென்ப. அஃது உண்டாமிடத்துச் சுற்றத்தொடர்ச்சி உண்டாம்; உண்டாகவே, கொலையே களவே வெகுளியே செருக்கே மானமே என்று இத்தொடக்கத்துக் குற்றம் நிகழும் என்பது. அதுகேட்கவே, தலையாயினர் அதன் கணின்று நீங்குவர்.

இனி, இடையாயினர், பெண் என்பது எற்புச் சட்டகம், முடைக் குரம்பை, புழுப் பிண்டம், பைம்மறியா நோக்கப் பருந்தார்க்குந் தகைமைத்து; ஐயும் பித்தும் வளியும் குடரும் கொழுவும் புரளியும் நரம்பும் மூத்திரபுரீடங்களும் என்று இவற்றது இயைபு பொருளன்று; பொருளாயின், பூவே சாந்தே பாகே எண்ணெயே அணிகலனே என்றிவற்றாற் புனையவேண்டா,

தான் இயல்பாகவே நன்றுயின் என்று அதன் அசுபத்தன்மை உரைப்பக் கேட்டு நீங்குவர்.

கடையாயினர் [1]எத்திறத்தானும் நீங்கார்; என்னை, பல் பிறப்பிடை ஆணும் பெண்ணுமாய்ப் பயின்று, போகந்துய்த்து வருகின்றமையின். அவர்க்கு இது காட்டப்பட்டது. என்னை, 'பேதையைக் காதல் காட்டிக் கைவிடுக்க' என்பதனால் அவன் தாழப்பட்ட இணைவிழைச்சினுள்ளே மிக்கதொன்று காட்டப் பட்டது. எஞ்ஞான்றும் மூப்புப் பிணிசாக்காடு இல்லது, நிச்ச

நிரப்பு இடும்பை இல்லது;
இவனும் பதினாறாட்டைப்
பிராயத்

தானும், இவளும் பன்னீராட்டைப் பிராயத்தாளாய், ஒத்த பண்பும், ஒத்த நலனும், ஒத்த அன்பும், ஒத்த செல்வமும், ஒத்த கல்வியும் உடையராய்ப், பிறிதொன்றிற்கு ஊனமின்றிப் போகந்துய்ப்பர் என்று காட்டப்பட்டது என்பது. என் போலவோ எனின், கடுத் தின்னுதானைக் கட்டி பூசிக் கடுத் தீற்றியவாறு போலவும், கலங்கற் சின்னீர் தெருளாமையான் உண்பானை, அறிவுடையான் ஒருவன் பேய்த்தேரைக் காட்டி, 'உதுக் காணுய், நல்லதொரு நீர் தோன்றுகின்றது, அந்நீர் பருகாய், இச்சேற்றுநீர் பருகி என் செய்தி!' என்று கொண்டு போய் நன்னீர் காட்டி ஊட்டியது போலவும், தான் ஒழுகா நின்றதோர் 'இணைவிழைச்சினுள்ளே மிக்கதோர் ஒழுக்கங் காட்டினுன். காட்டவே, கண்டு, 'இது பெறுமாறு என்னை கொல்லோ?' என்னும்; எனவே, மக்கட்பாட்டினானும் வலியா

செய்தலாற் செய்தவம்

ஈண்டு முயலப் படும்'

(குறள், தவம்-ரு)

என்பதாகலான் என்பது. அது கேட்டு, இனி யானும் தவஞ் செய்து இதனைப் பெறுவல் என்று, அதன்மாட்டு வேட்கை யால், தவஞ்செய்யும்; செய்யாநின்றானைப், 'பாவீ, இதன் பாத் ததோ வீடுபேற்றின்பம்?' என்று, வீடுபேற்றின்பத்தை விரித்து உரைக்கும். அதுதான் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காட்டு அவலக் கவலைக் கையாற்றின் நீங்கி, மணியினது ஒளியும், மலரி னது நாற்றமும், சந்தனத்தது தட்பமும்போல, உள்நின்று எழுதரும் ஒரு பேரின்ப வெள்ளத்தது என்பது கேட்டு, அதனை விட்டு, வீடுபேற்றின்கண்ணே அவாவிநின்று, தவமும் ஞான மும் புரிந்து, வீடு பெறுவானும் என்பது. அவனை வஞ்சித்துக் கொண்டுசென்று, நன்னெறிக்கண் நிறீஇயினமையின் களவியல் என்னுங் குறி பெற்றது.

இதுகற்க நாற்பொருளும் பயக்கும் என்பது

இனிப், புகழ் பொருள் நட்பு அறன் என்னும் நான்கினை யும் பயக்கும், இது வல்லனாக; என்னை, கற்றுவல்லன் என்ப தனின் மிக்க புகழ் இல்லை, உலகத்தாரானும் சமயத்தாரானும் ஒருங்கு புகழப்படுமாகலான் என்பது. இனிப், பொருளும் பயக்கும்; என்னை, பொருளுடையாரும் பொருள்கொடுத்துக் கற்பாராகலின் என்பது. இனி, நட்பும் பயக்கும்: என்னை, கற் றூரைச் சார்ந்து ஒழுகவே எமக்கும் அறிவுபெருகும் என்று பலருஞ் சார்ந்து ஒழுகலின் என்பது. இனி, அறனும் பயக்கும்; என்னை, ஞானத்தின் மிக்க கொடை இன்மையான் என்பது. இது பயன்.

இனிக், காலம் என்பது — கடைச்சங்கத்தார் காலத்துச் செய்யப்பட்டது.

இனிக், களம் என்பது — உக்கிரப்பெருவழுதியார் அவைக் களம் என்பது.

காரணம் என்பது — அக் காலத்துப் பாண்டியனும் சங்கத் தாரும் பொருளிலக்கணம் பெறாது இடர்ப்படுவாரைக் கண்டு ஆலவாயிற் பெருமானடிகளால் வெளிப்படுக்கப்பட்டது.

12

இறையனார் அகப்பொருள்

[களவு

## நூல்

இனிப், பாயிரம் [1]உரைத்தபின்னர் நூல் உரைக்கற்பாலது. அதுதான் நான்குவகையான் உரைக்கப்படும்: அவை யாவையோ எனின், நூல் நுதலியது உரைத்தலும், நூலுள் அதிகாரம் நுதலியது உரைத்தலும், அதிகாரத்துள் ஒத்து நுதலியது உரைத்தலும், ஒத்தினுட் சூத்திரம் நுதலியது உரைத்தலும் என இவை. அவற்றுள், நூல் நுதலியது உரைக்குமிடத்து, நூலாமாறும் நூல் என்ற சொற்குப் பொருளாமாறும் உரைத்து உரைக்கற்பாற்று.

### மூவகை நூலும், எதிர் நூலும்

அவற்றுள், நூல் ஆமாறு உரைக்குமிடத்து, நூல்தான் மூன்று வகைப்படும், முதனூலும் வழிநூலும் சார்புநூலும் என:

என்னை,

'முதல்வழி சார்பென

என்றாராகலின்.

அவற்றுள், முதனூல்

தாகும் :

என்னை,

நூல்மூன் ருகும்'

ஆவது — வரம்பில் அறிவன் பயந்த

'வினையி னீங்கி விளங்கிய வறிவின்

முனைவன் கண்டது

முதல்நூ லாகும்'

(மரபியல், கக)

## எனவும்,

## ‘முதல்வன் நூற்குப் பிறன்கோட் கூறாது’

எனவும்,

> ‘தந்திரஞ் சூத்திரம் விருத்தி மூன்றற்கு
> முந்து நூல் இல்லது முதல்நூ லாகும்’

எனவும் சொன்னாராகலின். [1]

இனி, அந்நூலோடு ஒத்த மரபிற்றாய் ஆசிரியமத விகற்பம் படக் கிளப்பது வழிநூல் எனப்படும்;

என்னை,

## ‘முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
## பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
## அழியா மரபினது வழிநூ லாகும்’

## என்றாராகலின்.

(பாடம்) 1. உரைத்த பின்றை நூலாமாறும்.

அவ்விரு நூலுள்ளும் ஒருவழி முடிந்த பொருளை ஓர் உபகார நோக்கி, ஒரு கோவைப்பட வைப்பது சார்புநூல் ஆகும்; என்னை,

'இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்'

என்றாருகலின்.

எதிர்நூ

இனி, எதிர்நூல் என்பதும் ஒன்று உண்டு. அது யாதோ எனின், முதனூலின் முடிந்த பொருளை ஓர் ஆசிரியன் யாதானும் ஒரு காரணத்தாற பிறழவைத்தால், அதனைக் கருவியால் திரிவு காட்டி ஒருவாமை வைத்தற்கு, ஒள்ளியான் ஒரு புலவனால் உரைக்கப்படுவது;

என்னை,

'தன்கோள் நிறீஇப் பிறன்கோள் மறுப்ப
தெதிர்நூ லென்ப ஒருசா ரோரே'

என்றாராகலின்.

அல்லதூஉம்,

நூலெனப் படுவது

நுதலிய பொருளை

ஆதிக் கண்ணே யறியச் சுட்டி
ஒத்துமுறை நிறுத்துச் சூத்திர
நிறீஇ

முதல்வழி சார்பென
மூவகை மரபின்
தொகைவகை விரியின் வகையறத்
தெரிந்து

ஞாபகஞ் செம்பொரு ளாயிரு வகையிற்
பாவன்மைத் தொழுகும் பண்பிற் ருகிப்
புணர்ச்சியின் அமைந்தது பொருளகத் தடக்கித்
தனக்குவரம் பாகித் தான்முடி வதுவே'

எனவும் சொன்னராகலின்.
அன்றியும்,

'நூலெனப் படுவது நுவலுங் காலை
நுதலிய பொருளை முதலிற் கூறி

முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி

உண்ணின் றமைந்த
உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்க லதுவதன்
பண்பே'

என்றாராகலானும், இவ்வகை சொல்லப்பட்டது நூல் என்ப.

14

இறையனார்

அகப்பொருள்

[களவு

• நூல் என்றதன் சொற்பொருள்

இனி, நூல் என்ற சொற்கும் பொருள் உரைக்கப்படும்: நூல் போறலின் நூல் என்ப, பாவைபோல்வாளைப் பாவை என்றாற்போல. நூல்போறல் என்பது, நுண்ணிய பலவாய பஞ்சின் துனிகளாற் கைவல்மகடூஉத் தனது செயற்கைநலங் தோன்ற ஒரிழைப்படுத்தலாம் உலகத்து நூல்நூற்றல் என்பது. அவ்வாறே, சுகிர்ந்து பரந்த சொற்பரவைகளாற் பெரும்புலவன் தனது உணர்வுமாட்சியிற் பிண்டம் படலம் ஒத்துச் சூத்திரம் என்னும் யாப்புநடைபடக் கோத்தல் ஆயிற்று, நூல்செய்த லாவது; அவ்வகை நூற்கப்படுதலின் நூல் எனப்பட்டது.

இனி, ஒருசாரார் நூல்போலச் செப்பஞ் செய்தலின் நூல் என்ப.

இனித், தந்திரம் என்னும் வடமொழிப் பொருளை நூல் என வழங்குதல் தமிழ் வழக்கு எனக் கொள்க. இது நூல் என்ற சொற்குப் பொருள்.

நூல்

நுதலியது

இனி, நூல் நுதலியதூஉம் உரைக்கற்பாலது. அது பாயிரத்துள்ளே உரைத்தாம்; தமிழ் நுதலிற்று என்பது. தமிழ் நான்கு வகைப்படும், எழுத்தும் சொல்லும் பொருளும் யாப்பும் என.

## அதிகாரம் நுதலியது

அவற்றுள், இவ்வதிகாரம் என்னுதலி எடுத்துக்கொள்ளப்பட்டதோ எனின், பொருள் ஆராய்தலை நுதலி எடுத்துக் கொள்ளப்பட்டது. இனி, அதிகாரம் நுதலியது எல்லாம் அதிகாரத்துள் ஒத்து நுதலாவன்றே, பல ஒத்துக்கொண்டது ஓர் அதிகாரமாகலான்.

இதனுள் இவ்வோத்து என்னுதலி எடுத்துக் கொள்ளப்பட்டதோ எனின், ஒத்தினது பன்மையின்மையின் ஒத்துஇன்று என்பது.

## சூத்திரம் நுதலியது

இனிச், சூத்திரம் நுதலியதூஉம் உரைக்கற் பாலது. இச் சூத்திரம் என் நுதலிற்றோ எனின்—சூத்திரம் உரைக்கின், அது நான்கு வகையான் உரைக்கப்படும். கருத்துரைத்துக் கண்ணழித்துப் பொழிப்புத்திரட்டி அகலங்கூறல் என.

இச் சூத்திரத்தின் கருத்து என்னையோ எனின், இவ் வதிகாரத்து உரைக்கின்ற பொருள் இன்னது என்பதூஉம், இன்னதனோடு ஒக்கும் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று. அன்னதாகல் இச் சூத்திரம் கண்ணழிப்ப விளங்கும்.

கண்ணழித்தல் என்பது பதப்பொருள் சொல்லுதல்

இதன் பொருள்: அன்பின் ஐந்திணைக் களவு எனப்படுவது என்பது—அன்பினுடைய ஐந்திணையிற் களவு எனப்பட்ட ஒழுக்கம் என்றவாறு; அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள் என்பது—அந்தணர் என்பார் பார்ப்பார், அருமறை என்பது வேதம், மன்றல் என்பது மணம், எட்டு என்பது அவற்றது தொகை என்றவாறு; கந்தருவ வழக்கம் என்மனார் புலவர் என்பது—கந்தருவ வழக்கத்தோடு ஒக்கும் வழக்கினைக் களவு என்று சொல்லுவர் கற்றுவல்லோர் என்றவாறு.

இனிப், பொழிப்புத் திரட்டல் என்பது — அன்பினுடைய ஐந்திணையிற் களவு எனப்பட்ட ஒழுக்கம் பார்ப்பார் வேதத்துக்கண் மகட்கோடலாறு என்னும் எட்டினுள் கந்தருவர் ஒழுகலாறு ஒப்பது, அதனைக் களவு என்று சொல்லுவர் கற்று வல்லோர் என்றவாறு.

இனிச், சூத்திரத்துப் பொருளைத் தூய்மை செய்தற்குக் கடா விடை உள்ளுறுத்து உரைக்கும் உரை யெல்லாம் அகல வுரை எனக் கொள்க.

அன்பு என்பது

அன்பின் ஐந்திணை என்ற விடத்து, அன்பு அறிந்தேனுயி னன்றே, அன்பினுடைய ஐந்திணையும் அறிவது எனின், அது, 'குடத்துள் விளக்கும், தடற்றுள் வாளும் போல' இதுகாண் அன்பு என்று [1]போதத்திறந்து காட்டலாகாது. அன்புடைய ரான குணங் கண்டவிடத்து இவை உண்மையான் ஈங்கு அன்பு உண்டென்று அனுமித்துக் கொள்ளற்பாற்று. அன்புடையரான குணம் யாவையோ எனின்—சாவிற்சாதல், நோவினோதல், ஒண்பொருள் கொடுத்தல், நன்கினிது மொழிதல், புணர்வு நனி வேட்டல், பிரிவு நனி யிரங்கல் என இவை; என்றார்க்கு, இவை திரிபுடைய; என்னை இவை திரிபுடையவாறு எனின்,

சாவிற் சாதல் என்பது, அன்பினானே நிகழ்வது அன்று பிணியுடையளாய் வாழ்க்கையை முனிந்து செல்வாள், இது தலைக்கீடாகச் சாவல் என்று சாவவும் பெறும்; இனிக், 'கண்டு

(பாடம்) 1. தந்து.

ரன்றே, குடுமிக்கூந்தலில் நறுநெய் பெய்து, கொண்டானிற் பின்னேயும் இருந்து, சோறு தின்று வாழ்கின்றுள், ஓ கொடியளோகாண்! என்று நித்தல் பழி தூற்றப்பட்டிருந்து, பின்னுமே ஒரு நாட் சாவல், அதனுன் இன்றே சாவல்' எனச் சாவவும் பெறும்; அதுவன்றிப் புகழ்வேண்டிச் சாவவும் பெறும்; கணவனெடு செத்தார் சுவர்க்கம் புகுவர் என்னும் உரைகேட்டு அதுவேட்கையானுஞ் சாம்; அப்பரிசு அன்றி அன்பினனுஞ் சாம்; அஃது ஒருதலையா நிகழ்வது அன்று என்பது.

இனி, நோவின் நோதல் என்பது, இன்னநோ என்று அறியுலாகாது; அதுவும் திரிபுடைத்து; 'அன்பு உள்வழியும் அன்பு இல்வழியும் தோன்றும் என்று மறுக்கப்படும்.

ஒண்பொருள் கொடுத்தல் என்பது, கணிகையர் கூட்டம் பொருளான ஆம்; ஆகலின், அதுவும் அன்பு அன்று.

நன்கினிது மொழிதல் என்பது, நன்கினிது சொல்லிப் பகைவருந் தம் கருமம் முடிப்பர்; ஆகலின், அதுவும் அன்பு அன்று.

புணர்வு நனிவேட்டல் என்பது, அச்சம் காரணத்தானும் புணர்வு வேட்டார் போலப் புணர்வர்; ஆகலின், அதுவும் திரிபுடைத்து.

பிரிவு நனியிரங்கல் என்பது, நீரும் ஆடார், பூவுஞ் சூடார், சாந்தும் அணியாராய்ப் பிரிந்திருந்தார்போல வாடியிருப்பர், அன்பு இலாதாரும்; ஆகலின், அதுவும் திரிபுடைத்து.

இனித், திரிபின்றி இக்குணங்கள் நிகழ்ந்தவழி அன்பு உண்டு எனக் கொள்க. அஃது எங்ஙனம் நிகழுமோ எனின், அவன் இறந்துபட்டவாறே தானும் இறந்துபட்டவழி அன்பி ஞனே ஆயிற்று எனக் கொள்க. அல்லாதனவும் இவ்வகையால் திரிபு இல்லன அன்பினனே ஆயிற்று எனக் கொள்க.

அல்லதூஉம், "அன்பு எனப்பட்டது, தான் வேண்டப்பட்ட பொருளின்கண் தோன்றும் உள்ளநிகழ்ச்சி" அதனைக் காட்டிக் காண்க என்னுனன்றே, தான் அறிந்த பொருளாகலின்; என்னை? மாணுக்கன் நீர்வேட்டான், நீர்வேட்ட வேட்கையைக் காட்டுக என்னுன், தான் அறிந்த பொருளாகலின்; காட்டுக என்னுமே யெனின் வஞ்சித்தானும்; அவனை ஆசிரியன் அறிவிக்க லுறுமேயெனின் பேதையாயினுனும்.

(பாடம்) 1. அன்பின்வழியும்.

∴ வைப்பு முறை

ஆழ்ந்து உரைநப்பாற்று.

சூத்திரம்-க] இறையனர்

அகப்பொருள் 17

# பொருள்

## இரண்டு வகைப்படும்

அல்லதூஉம், உலகத்துப் பொருள்தான் இரண்டுவகை யான் உணர்த்தப்படும். "உண்மைமாத்திரை உணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாதனவும், உண்மையும் பிழம்பும் உணர்த்தப் படுவனவும் என." பொருள் அறியும் முறைமை. ௨

அவற்றுள், உண்மையுணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படா தன காமமும் வெகுளியும் மயக்கமும் இன்பமும் துன்பமும் முதலாகவுடையன;

என்னை,

'ஒப்பும் உருவும் வெறுப்பும் என்று

கற்பும் ஏரு

மெழிலும் என்று

சாயலு நாணு மடனும் என்று

நோயும் வேட்கையு நுகர்வும் என்றுங்கு
ஆவயின் வரூஉங்
கிளவி யெல்லாம்

நாட்டிய மரபின்
நெஞ்சுகொளி னல்லது
காட்ட லாகாப் பொருள வென்ப.'
(பொருளியல் - ௫௨)

என்றாராகலின்.

இனி, உண்மையும் பிழம்பும் உணர்த்தப்படுவன மாடக்கூடல் மாநிலத் தொடக்கத்தன என்று கொள்க. அன்பென்னும் பொருள் உண்மைமாத்திரை யல்லது, பிழம்பு உணர்த்தப்படாதது என்பது; என்றார்க்கு, அன்பு என்பது தான் கருதப்பட்ட பொருளின்கண் தோன்றும் வேட்கையன்றே, ஈண்டு நம்மால் அன்பு என்று விகற்பிக்கப்படாநின்றது; அஃது யாதோ எனின், நாணுச் சுருங்க, புணர்வுவேட்கை பெருக, ஒருவனோடு ஒருத்தியிடை நிகழும் அன்பு விசேட இலக்கணம் உடைத்து என்று கொள்க.

ஐந்திணை என்பன

அஃதேயெனின், அன்பு அறிந்தேன்; ஐந்திணை யாவன யாவையோ எனின், *குறிஞ்சி நெய்தல் பாலை முல்லை மருதம் என இவை. ஆயின், ஐந்திணை என்றதல்லது அவற்றது பெயரும் முறையும் இலக்கணமும் அறியச் சொல்லிற்றிலரோ எனின், இது சுருக்கநூலாகலிற் சொல்லிற்றிலர்; அவை முடிந்த நூலிற்கொண்டு உரைக்கப்படும். உரைக்குமிடத்து, முதல் கரு உரிப்பொருள் என மூன்றுவகையான் உரைக்கப்படும்;

இ. அ.—2

* [illegible]

18

# இறையனார் அகப்பொருள்

[களவு

என்னை,

'முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே.'

என்றாராகலின்.

(அகத்திணையியல் - ௪)

குறிஞ்சிக்கு நிலம், மலையும் மலைசார்ந்த இடமும்; பொழுது, கூதிரும் யாமமும் முன்பனியும்.

நெய்தற்கு நிலம், கடலும் கடல்சார்ந்த இடமும்; பொழுது, எற்பாடு.

பாலைக்கு நிலம் இல்லை.

'நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.' (அகத்திணையியல் - உ)

என்றார் தொல்காப்பியனார் ஆகலின், பொழுது, நண்பகலும், வேனிலும், பின்பனியும். நிலம் இன்றிப் பொழுதினானே திணை யாமோ எனின், குறிஞ்சியும் முல்லையும் அடுத்த நிலமே காலம் பற்றிப் பாலைநிலமாம் என்பது.

முல்லைக்கு நிலம், காடும் காடுசார்ந்த இடமும்; பொழுது, காரும் மாலையும்.

மருதத்திற்கு நிலம், பழனமும் பழனஞ் சார்ந்த இடமும்; பொழுது, வைகறை யாமம்.

அஃது என்னை பெறுமாறு எனின்,

'மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.' (அகத் - ரு)

'காரு மாலையு முல்லை.' (அகத் - சு)

'குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார்

புலவர்.' (அகத் -
எ)

'பனியெதிர் பருவமும்
உரித்தென மொழிப.' (அகத் -
அ)

'வைகுறு விடியல்
மருதம்.'
(அகத் - கூ)

'எற்பாடு

நெய்த லாதல்
மெய்பெறத் தோன்றும்.'
(அகத் - க0)

'நடுவுநிலைத் திணையே

நண்பகல் வேனிலொடு

முடிவுநிலை மருங்கின்

முன்னிய நெறித்தே.' (அகத் - கக)

'பின்பனி தானும்

உரித்தென மொழிப.'

(அகத் - கஉ)

மருதத்திற்கும் நெய்தற்கும் பெரும்பொழுது சொல்லிற் றின்மையின், அறுவகை இருதுவும் உரிய எனக் கொள்க:

## இவை முதல்.

## ஐந்திணைக் கருப்பொருள்

இனிக், கரு என்பது தெய்வமும் உணவும் மாவும் மரமும் புள்ளும் பறையும் செய்தியும் யாழும் முதலாக உடையது;

என்னை,

'தெய்வம் உணாவே
மாமரம் புட்பறை
செய்தி யாழின்
பகுதியொடு தொகைஇ[1]
அவ்வகை பிறவுங்
கருவென மொழிப.'

(அகத் - உ0)

என்றாராகலின். அவை

அம்முறையானே குறிஞ்சிக்குத்,

தெய்வம் - முருகவேள் ;

உணா - ஐவன நெல்லும், தினையும்;

மா - புலியும்,

பன்றியும், யானையும்;

சொல்லுதும்.

மரம் -

அகிலும், ஆரமும், திமிசும்,

தேக்கும், வேங்கையும்;

புள் - கிளியும், மயிலும்;

பறை - வெறியாட்டுப்பறையும், தொண்டகப்பறையும்,

குரவைப்பறையும்;

(பாடம்) 1. தொகைஇய.

1 முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல்
2 குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல்
3 குறிஞ்சி நெய்தல் பாலை முல்லை மருதம்



செய்தி - தேன் அழித்தலும், கிழங்கு அகழ்தலும், குன்றம் ஆடுதலும், தினைக்கிளி கடிதலும்;

யாழ் - குறிஞ்சியாழ்.

'பிறவும்' என்றதனால்,

தலைமகன் பெயர் -
சிலம்பன், வெற்பன், பொருப்பன் ;
தலைமகள் பெயர் -
கொடிச்சி, குறத்தி ;
நீர் - அருவிநீரும்,
சுனைநீரும் ;

ஊர் - சிறுகுடியும்,
குறிச்சியும் ; பூ
- குறிஞ்சியும், காந்தளும்,
வேங்கையும், சுனைக்குவளையும்;

மக்கள் பெயர் - குறவர்,

இறவுளர், குன்றவர் எனப்படும்.

நெய்தற்குத்,

தெய்வம் - வருணன்;

உணா -

மீன்விலைப்பொருளும்,

உப்புவிலைப்பொருளும்;

மா - சுறாவும்,

முதலையும்;

மரம் - புன்னையும்,

ஞாழலும், கண்டலும்;

புள் - அன்னமும்,

அன்றிலும், மகன்றிலும்;

பறை - மீன்கோட்

பறையும், நாவாய்ப் பறையும்;

செய்தி-மீன்விற்றலும், உப்புவிற்றலும், அவை படுத்தலும்; யாழ் - விளரியாழ்.

இனிப்

'பிறவும்' என்றதனால்,

தலைமகன் பெயர் -

துறைவன், கொண்கன்,

சேர்ப்பன்;

தலைமகள் பெயர் -

நுளைச்சி, பரத்தி;

நீர் - மணற்கிணறும்,

உவர்க்கழியும்;

பூ - வெள்ளிதழ்க்

கைதையும், நெய்தலும்;

ஊர் - கலமேறு

பட்டினமும், சிறுகுடியும்,

பாக்கமும்;

மக்கள் பெயர் - பரதர்,

எனப்படும்.

பாத்தியர், துளையர்,

துளைச்சியர்

சூத்திரம்-க] இறையனார் அகப்பொருள்

21

தொல்காப்பியனார் பாலைக்கு - நிலம் வேண்டிற்றிலர்; வேண்டாமையின், தெய்வமும் வேண்டிற்றிலர்.

பிறர், பகவதியையும் ஆதித்தனையும் தெய்வம் என்று

வேண்டுவர்;

உஞு - ஆறலைத்தனவும், ஊரெறிந்தனவும்;

மா - வலியழிந்த யானையும், புலியும், செந்நாயும்;

மரம் - இருப்பையும், ஓமையும்;

புள் - கழுகும், பருந்தும், புறவும்;

பறை - பூசற்பறையும், ஊரெறிபறையும், நிரைகோட் பறையும்;

செய்தி -
நிரைகோடலும்,
சாத்தெறிதலும், சூறை
[1]யாடலும்;
பண் - பஞ்சுரம்.
'பிறவும்' என்றதனால்,

தலைமகன் பெயர் - மீளி,
விடலை, காளை;
தலைமகள் பெயர் -
எயிற்றி, பேதை;
பூ - மராம்பூவும்,

குராம்பூவும், பாதிரிப்பூவும் ;

நீர் - அறுநீர்க்கூவலும்,

அறுநீர்ச்சுனையும் ;

ஊர் - கொல்குறும்பு,

மக்கள் பெயர் - எயினர்,

எனப்படும் ;

முல்லைக்குத்,

தெய்வம் - வாசுதேவன் ;

எயிற்றியர், மறவர் மறத்தியர்

உணா - வரகும் சாமையும்;

மா - முயலும்,
சிறுமானும்;

மரம் - கொன்றையும்,
குருந்தும்;

புள் - கானங்கோழியும்,
மயிலும், சிவலும்;

பறை - [2]ஏறுகோட் பறையும், முரசும்;

(பாடம்) 1. கோடலும். 2. மன்றுகோட்.

செய்தி - வரகுக்குக் களைகட்டலும், கடாவிடுதலும், நிரைமேய்த்தலும் ;

அவை அறுத்தலும்,

பண் - முல்லை.

'பிறவும்' என்றதனால்,

தலைமகன் பெயர் - குறும்பொறை நாடன் ;

தலைமகள் பெயர் - கிழத்தி, மனைவி ;
நிலத்துத் தலைமகட்கும் உரிய ;)

(இப் பெயர் மருத

பூ - முல்லையும்,

தோன்றியும் ;

நீர் - கான்யாறு ;

ஊர் - பாடியும்,

சேரியும் ;

மக்கள் பெயர் - இடையர், இடைச்சியர், ஆயர், எனப்படும்.

ஆய்ச்சியர்

மருதத்துக்குத்,

தெய்வம் - இந்திரன் ;

உணு - செந்நெல்லும்,

வெண்ணெல்லும் ;

மா - எருமையும், நீர்நாயும்

;

மரம் - வஞ்சியும்,

காஞ்சியும், மருதும் ;

புள் - நீர்க்கோழியும்,

தாராவும்;

பறை - மணமுழவும், நெல்லரி கிணையும்;

செய்தி - நெல்லரிதலும்,

களைகட்டலும்;

அவை கடாவிடுதலும், பயிர்க்குக்

யாழ் - மருதயாழ்.

'பிறவும்' என்றதனால்,

தலைமகன் பெயர் - ஊரன்,

மகிழ்நன் ;

தலைமகள் பெயர் - கிழத்தி,

மனைவி ;

பூ - தாமரைப்பூவும், செங்கழுநீர்ப்பூவும் ;
நீர் - மனைக்கிணறும், பொய்கையும் ;

இக் கூறப்பட்ட கரு மயங்கியும்

வரப்பெறும்;

என்னை,

'எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்
வந்த நிலத்தின் பயத்த

ஆகும்.'

(அகத்-உ௨)

என்றாகலின்.

ஐந்திணை

# உரிப்பொருள்

இனி, உரிப்பொருள் ஆவது திணைக்கு உரியபொருள் என்றவாறு. அவை யாவையோ எனின், புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல், அவற்றின் நிமித்தம் என இவை;

என்னை,

'புணர்தல் பிரிதல்
இருத்தல் இரங்கல்
, ஊடல் இவற்றி னிமித்த
மென்றிவை
தேருங் காலைத்
திணைக்குரிப் பொருளே.'
(அகத்-கசு)

என்றாராகலின். அவற்றுள்,
புணர்தலும் புணர்தல்

நிமித்தமும் குறிஞ்சி;
பிரிதலும் பிரிதல்
நிமித்தமும் பாலை;
இருத்தலும் இருத்தல்
நிமித்தமும் முல்லை;
இரங்கலும் இரங்கல்
நிமித்தமும் நெய்தல்;
ஊடலும் ஊடல்
நிமித்தமும் மருதம்.

புணர்தலே கொல்லோ குறிஞ்சி எனின், புணர்தலே அன்று; பிரிவச்சமும், வன்புறையும், தலைமகன் நீங்கினவும், பாங்கற்கு உரைத்தனவும், பாங்கன் கழறினவும், தலைமகன் எதிர்மறுத்தனவும், பாங்கன் எதிர்ந்தனவும், தலைமகளைக் கண்டனவும், ஆற்றாயினவும், தலைமகன் சென்றனவும், தலைமகன் தலைப்பெய்தனவும் இத்தொடக்கத்தனவெல்லாம்; தலைமகட்கும் தோழிக்கும் இவ்வகையானே நோக்கி விகற்பிக்க, இறப்பவும் பலவாம். அவை யெல்லாம் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாய் அடங்கும். ஏனையவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

## திணை

## இன்னது என்பது

இனி, ஒழுக்கத்தினைத் திணை என்பாரும், நிலத்தினைத் திணை என்பாரும் என இருபகுதியர் ஆசிரியர். அது பொருந்



தாது; ஒழுக்கமே திணை எனப்படும். குறிஞ்சியாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப்பட்டது; என்னை, விளக்காகிய சுடர் இருந்த இடனும் விளக்கு எனப்பட்டது போல என்பது.

இனி, ஒரு சாரார் ஒழுக்கத்தினையும் திணை என்ப. நிலத்தினையும் திணை, என்ப. ஆகலானன்றே, 'அன்பினைந்திணை' என்றது, ஐந்திணையாடை, ஐந்திணை மஞ்சிகை என்றதுபோல என்பே; அது பொருந்தாது. அஃதே கருதியது எனின், முன்னர்த்,

‘ திணையே கைகோள்.’

(இறையனார்-௫௬)

என்னுனன்றே,

‘இணையே கைகோள்’ என்னுமன்றே, இணை என்று கருதினுயின் என்பது. அஃதேயெனின், ‘ஐந்து திணை’ என்னும், ஐந்து சாண், ஐந்து கணம் என்றதுபோல எனின், அறியாது கடாவினுய்; ஐந்து தலையுடைய நாகத்தை ஐந்தலை நாகமும் என்ப; ஐந்து தலை நாகமும் என்ப; இரு முடிபும் உடைத்து. என்னை, குற்றியலுகரப் புணரியலுள்,

‘ முதனிலை யெண்ணின்முன் வல்லெழுத்து வரினும்

ஞாமவத் தோன்றினும்

யவவந் தியையினும்

முதனிலை யியற்கை

யென்மனார் புலவர்.’

(குற்றியலுகர-௭௩)

என்றுராகலின்.

7

அஃதேயெனின், அன்பினது ஒழுக்கத்தை அன்பின் வேறென்று கொள்வல், தச்சனது மாடம் தச்சனின் வேறு ஆயதுபோல என்றாற்கு, அதுவன்று; பொன்னினது குடம் பொன்னின் வேறல்லதுபோல என்பது. மூன்றாம் வேற்றுமை காரண காரியத்தை வேறு உணரவும் நிற்கும், வேறன்றி உணரவும் நிற்கும்; அவற்றுள், வேறன்றி உணரநிற்கும் பகுதி கொள்க.

அஃதேயெனின், 'ஐந்திணை' என்பதன் முன்னர்க், 'களவு' என்னுஞ் சொல் எத்திறத்தான் வந்தது? ஒரு சொன்முன் ஒரு சொல் வருங்காற் பயனிலை வகையானும், தொகைநிலை வகையானும், எண்ணுநிலை வகையானும் என மூன்றினுள் ஒன்று பற்றியன்றே வருவது; அவற்றுள், இஃது எவ்வகையான் வந்ததோ எனின், தொகைநிலைவகையான் வந்தது என்பது. தொகை தாம் பல; அவற்றுள் இஃது எத்தொகையான் வந்தேதா எனின், வேற்றுமைத்தொகையான் வந்தது என்பது.

அவ்வேற்றுமைத்தொகை தாம் பல; அவற்றுள் இஃது எவ் வேற்றுமைத்தொகையோ எனின், ஏழாம்வேற்றுமைத் தொகை என்பது. அவ்வேழாம் வேற்றுமை உருபுதாம் பல; அவற்றுள் யாது தொக்கது எனின், உள் என்பது தொக்கது. ஐந்திணையுட் களவு என்பதாயின், ஐந்திணையுள்ளுங் களவு வேறாகாதோ, குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும் அவ் விடத்தின் வேறாயதுபோல எனின், ஏழாம்வேற்றுமை இடத் தையும் இடத்துநிகழ்பொருளையும் வேறு உணரவும் நிற்கும், வேறன்றி உணரவும் நிற்கும்; அவற்றுள், வேறு உணர நின்ற வழிக் காட்டிக் கடாவினாய்; வேறன்றி உணர நின்றவழிக் காட்டியக்கால் அதுபோலக் கொள்க. அரங்கினுள் அகழ்ந் தான், மாடத்தினுள் அகழ்ந்தான் என்றதுபோல, ஐந்திணை யுள்ளுங் களவு வேறன்று என்பது.

அஃதேயெனின், 'அன்பின் ஐந்திணைக் களவு அந்தணர் அருமறை' என அமையாதோ? 'எனப்படுவது' என்றது எற்றிற்கோ எனின், செய்யுளின்பத்தின்பொருட்டு வ்ந்தது என் னும் ஒருவன்; அற்றன்று, அதனான் ஒருபொருள் உரைப்பல் என்னும் ஒருவன். அதனான் ஒரு பொருள் உரைப்பான் பக்கம் வலியுடைத்து. அஃதியாதோ எனின், களவு என்றற் குச் சிறப்புடைத்து என்றவாறு. 'ஊர் எனப்படுவது உறை யூர்' என்ற இடத்துப் பிறவும் ஊருண்மை சொல்லி, அவற்று ளெல்லாம் உறையூர் சிறப்புடைமை சொல்லுப. இங்குப் பிற வும் களவுண்மை சொல்லி, அக் களவுகட்கெல்லாம் இக் களவு சிறப்புடைத்து சுவர்க்கம் வீடுபேறுகளை முடிக்குமாகலான், 'எனப்படுவது' என்று சொல்லிச் சிறப்பிக்கப்பட்டது. அது பாயிரத்துள்ளும் உரைத்தாம். மற்று உலகத்துக் களவாயின எல்லாம், கைகுறைப்பவும் கண்சூலவும் கழுவேற்றவும் பட்டுப், பழியும் பாவமும் ஆக்கி, நரகத் தொடக்கத்துத் தீக்கதிகளில் உய்க்கும். இது மேன்மக்களாற் புகழப்பட்டு ஞான வொழுக்கத் தோடு ஒத்த இயல்பிற்றாகலானும், பழி பாவம் இன்மையானும், 'எனப்படுவது' என்று விசேடிக்கப்பட்டது.

இனி, அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள் என்பது; அந்தணர் என்பார் பார்ப்பார்; அருமறை என்பது வேதம்; மன்றல் என்பது மணம்; எட்டு என்பது அவற்றது தொகை கொடுத்துச் சொன்னவாறு. அவை யாவையோ எனின் — பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தர்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் என இவை;



என்னை,

' அறநிலை யொப்பே பொருள்கோள் தெய்வம்
யாழோர் கூட்டம் அரும்பொருள் வினையே
ஒ

இராக்கதம் பேய்நிலை
யென்றிக் கூறிய
மறையோர் மன்ற
லெட்டவை அவற்றுள்
துறையமை நல்லியாழ்த்
துணைமையோர் இயல்பிதன்[1]
பொருண்மை யென்மனார்
புலமை யோரே.'

என்பதன் பொருளென்று

உணர்வது.

பிரமம் என்பது — நாற்பத் தெட்டியாண்டு பிரமசரியங் காத்தாற்குப் பன்னீராட்டைப் பிராயத்தாளை அணிகலன் அணிந்து கொடுப்பது. கொடாவிடின், ஓர் இருதுக்காட்சி ஒருவனைச் சாராது கழிந்தவிடத்து ஒரு பார்ப்பனக் கொலை யோடு ஒக்கும் என்பது; இதனை அறநிலை என்றுணர்வது.

பிரசாபத்தியம் என்பது — மைத்துன கோத்திரத்தான் மகள் வேண்டிச் சென்றால் மறாது கொடுப்பது; இதனை ஒப்பு என்று உணர்வது.

ஆரிடம் என்பது — ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நீரிற் கொடுப்பது; இதனைப் பொருள்கோள் என உணர்வது.

தெய்வம் என்பது — வேள்வி ஆசிரியற்கு வேள்வித்தீமுன் வைத்துக் கொடுப்பது; இதனைத் தெய்வம் என்று வழிபடப் பட்டது.

காந்தர்வம் என்பது — இருவர் ஒத்தார் தாமே கூடுங்கூட் டம்; இதனை யாழோர் கூட்டம் என்று உணர்வது.

அசுரம் என்பது — கொல்லேறு கொண்டான் இவளை எய்தும், வில்லேற்றினான் இவளை எய்தும், திரிபன்றி எய்தான் இவளை எய்தும், மாலை சூட்டப்பட்டான் இவளை எய்தும் என இவ்வாறு சொல்லிக் கொடுப்பது, இஃது அரும்பொருள் வினை நிலை என்பது.

இராக்கதம் என்பது — அவள் பெறாது வலிந்து கொள்வது.

தன்னினுந் தமரினும்

பைசாசம் என்பது — மூத்தாள் மாட்டும் துயின்றாள் மாட்டும் களித்தாள் மாட்டும் சார்வது; இது பேய்நிலை எனப்படும்.

---

(பாடம்) 1. புலமையோர் புணர்ப்பிதன். 2. அதனை ஒப்பென்பது.

27.

இவ்வெட்டு மணமும்,

பட்டன என வுணர்க.

'மன்றல் எட்டு'

என்று சொல்லப்

"இனிக், கந்தருவ வழக்கம் என்பது — கந்தருவர் என்பார் ஈண்டுச் செய்த நல்வினைப் பயத்தால் ஒருவர் கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி, இருவரும் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுப் புணர்வது; இது காந்தர்ப்பமணம். இதனை ஒப்பதனைக் களவு என்று வேண்டும் இவ்வாசிரியன்."

வெளிப்பட்ட பின்றையும் உரிய கிளவி.

என்பது என்னுதலிற்றோ எனின், அம்பலும் அலரும் ஆயிற்றென்று உள்ளத்து வெளிப்பட்ட பின்றை நிகழ்பாலது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: 'வெளிப்பட்ட பின்றையும் உரிய கிளவி' என்றொனினும், வெளிப்பட்டபின்றைக் கிளவியும் உரிய என மொழிமாற்றிக் கொள்க. கிளவி என்பது, மகட்கூறுதல்;





அதுவும் உரித்து என, மற்றும் ஒன்றுண்டு கூறற்பாலது; அஃதியாதோ எனின், அவனுடன்போக்கும் உரித்து என்றவாறு.

அஃது உரியவாமாறு சொல்லுதும்: இது பலராலும் அறியப்பட்டது என்னும் கருத்தால் நிகழ்கின்ற, தலைமகட்கும் தோழிக்கும் உடனே நிகழும். இருவரும் யாமே உணர்ந்தேம் எனக் கருதுதலாற் கதுமென இந்நிலைமைக்கண் வரினும் வாராமைக்கொள்வேன் என்னுங் கருத்தினால், பண்டு அவன் வந்து பயின்ற இடத்தே தோழி செல்லும்; செல்லத், தோழி, தன் எதிர்ப்பட்ட தலைமகனை வலங்கொண்டு சார்ந்து, 'நின்னால் தலையளிக்கப்பட்ட தலையளி அலராயிற்று, பலராலும் அறியப் பட்டு' என்னும்; அதற்குச் செய்யுள் :

## அலரறிவுறுத்தல்

'பலராய் எதிர்நின்று மொழிப்பட்
டார்தங்கள் பைந்நிணம்வாய்
புலரா அசும்புடை வேல்மன்னன் வேம்பொடு போந்தணிந்த
மலரார் மணிமுடி மான்தேர் வரோதயன் வஞ்சியன்னாட்கு

அலராய் விளைகின்ற தாலண்ணல்
நீசெய்த ஆரருளே.' (கசுரு)

பொருள்தான் எனநின்ற மானதன்

பூலந்தைத் தோற்றுப்புல்லார்
இருள்தா னடைகுன்றம் ஏறவென்
றேன்கன்னி ஈர்ம்பொழில்வாய்
மருள்தான் எனவண்டு பாடுந்தண்
தாரண்ணல் வந்துசெய்த
அருள்தான் அலராய் விளைகின்ற
தால்மற்றிவ் வாயிழைக்கே.' ()

'அறிந்தோர் அறனிலர்
என்றலர் சிறந்த
இன்னுயிர் கழியினும்
நனியின் ஞதே
புன்னையங் கானற்
புணர்குறி வாய்த்த
பின்னீர் ஓதியென்
தோழிக் கன்றே

படுமணி யானைப்
பசும்பூண் சோழர்
கொடிநுடங்கு மறுகின்
ஆர்க்காட் டாங்கட்
கள்ளுடைத் தடவிற்
புள்ளொலித் தோவாத்
தேர்வழங்கு தெருவின்
அன்ன
கௌவையா
கின்ற தையநின் அருளே.'
(நற்றிணை - உஉஎ)

இது சொல்லிப், பின்னும், 'நீ இது புகுதருந்துணையும் இவ்வாறு ஒழுகுவாயாயினாய், அறனறியாமையான்; அறிதியென்னின் இது புகுதாமை வரைந்தெய்துவாய் மன்னோ, அல்லதூஉம், பிறரும் வரைந்தெய்துதற்கு முலைவிலையொடு புகுந்து பொன்னணிவான் நின்றாரும் உளர்' எனப் படைத்து மொழிந்து சொல்லும்; அதற்குச் செய்யுள் :

மகட்பேச்சுரைத்தல்

'நீரணி வேலி நெடுங்களத்
தொன்ஞர் நிணம்அளைந்த
போரணி வேல்மன்னன்
கன்னியன் ருள்தன்னைப்
பொன்னணிவா
காரணி வார்முர சார்ப்பப் பிறருங் கருதிவந்தார்
வாரணி பூங்கழல் அண்ணலென் ஆகி வலிக்கின்றதே.'

[ன்
(கசுஎ)

'வேலைத் துளைத்தகண் ஏழை திறத்தின்று விண்ணுரிஞ்சும்
சோலைச் சிலம்ப துணிவொன் றறிந்து சுடருமுத்த

மாலைக் குடைமன்னன்
வாள்நெடு மாறன்வண்
கூடலின்வாய்க்
காலைத் திருமணை முற்றத்
தியம்புங் கடிமுரசே.'
(கசுஅ)

'போர்மலி தெவ்வரைப்
பூலந்தை வென்றான் புகாரனைய
வார்மலி கொங்கை
மடந்தையை வேறோர் மணங்கருதிக்
கார்மலி வார்முர சார்ப்பப்

பிறருங் கருதிவந்தார்
ஏர்மலி தாரண்ணல் என்றே
இதன்திறத் தெண்ணுவதே.' (கசுக)
'வேயும் புரையுமென் தோளி
திறத்தின்றை எல்லையுள்விண்
தோயுஞ் சிலம்ப துணிவொன்
றறிந்தொன் ஞற்புலவர்
ஆயும் தமிழரி கேசரி கூடல்
அகனகர்வாய்
ஏயுந் திருமனை முற்றத்
தியம்பும் எறிமுரசே.'
(கஎ0)

இங்ஙனமுஞ் சொல்லும் :

பொன்னணிவுரைத்தல்

'குன்றொத்த யானைச்செங் கோல்நெடு மாறன்தென் கூடலன்ன
மென்தொத் தணிகுழல் ஏழை திறத்து விளைவறிந்தே
இன்றொத்த தொன்று துணிநீ சிலம்பவின் றுயினெம்மூர்
மன்றத்து நின்று முழங்குங்கொல் நாளை மணமுரசே.' (கஎக)

'நலம்புரி தெய்வமென் றுய்செய்வ தென்னுறை யாற்றுவென்ற
உலம்புரி தோள்மன்னன் தென்புனல் நாட்டொரு வற்கியைந்து
குலம்புரி கோதையைக் காப்பணிந் தார்கொடி மாடமுன்றில்
வலம்புரி யோடு முழங்குங்கொல் நாளை மணமுரசே.' (கஎஉ)

இங்ஙனஞ் சொல்லப்பட்ட தலைமகன், 'என்னாற் செய்யப் பட்டது என்னோ?' என்னும். எனத், தோழி, 'என்னை வினவற் பாலையல்லை, நீ இதற்குத் தக்கவாறு அறிந்து செயற்பாலை' என்னும் என்பது.

'நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே.'

என்பதாகலான், 'நீ ஒரு பொருளை விகற்பித்து அறியுந்துணை, யான் அறியுமாறில்லை பிற; அல்லதூஉம், யாம் குற்றேவல்

# இறையனார் அகப்பொருள்

## [களவு

மகளிர், நீர் ஏயினவாறு ஒழுகுவதல்லது, "இதுகொண்டு இது செய்மின்" என்றற்குத் தக்கேமல்லேம்' என்னும்; அதற்குச் செய்யுள் :

## முலைவிலை கூறல்

'என்னால் இதுசெய்கென் றென்சொல்ல லாமிகற் பாழிவென்ற
மின்னார் அயிற்படைச் செங்கோல் விசாரிதன் வீங்கொலிநீர்த்
தென்னா டெனினுங்கொள் ளார்விலை யாத்தமர் சீர்செய்வண்டு
முன்னாள் மலரென் றணையுங்கண் ணேழை முகிழ்முலைக்கே.' ()

இதுகேட்ட தலைமகன், 'உடன்கொண்டுபோவது துணிந்தே னெனினும், நிழலும் நீரும் இல்லாத அழல்வெங்கானம் ஆற்ற கில்லாள்கொல்லோ' என்னும்; என்ன, 'அன்ன வெங்கான மெனினும் எம்பெருமாட்டி நும்மொடுவரப் பெரிதும் இனிய வாம்' என்னும்; அதற்குச் செய்யுள் :

## ஆதரங் கூறல்

'மால்புரை யானை மணிமுடி

மாறன்மண் பாய்நிழற்றும்

பால்புரை வெண்குடைத் தென்னன் பறந்தலைக் கோடிவென்ற
செங்கோல்புரை வெம்மையங் கானம் எனினும் அவ்வேந்தன்செய்ய
செவ்வேல்புரை தண்மைய வாநும்மொ டேகினக் கொம்பினுக்கே.' ()

'கழலணி போர்மன்னர் கானீர்க் கடையற் படக்கடந்த

தழலணி வேல்மன்னன்

சத்துரு துரந்தரன்

தன்முனைபோன்று

அழலணி வெம்மைய

ஆயினுங் கானம் அவன்குடையின்

நிழலணி தன்மைய

வாநும்மொ டேகினெம்

நேரிழைக்கே.' (௧௭௫)

அதுகேட்டு, 'ஆயின், உடன்போக்குவலித்தேன், நீ இதனை அவட்குச் சொல்லவேண்டும்' என, 'நன்று, எம்பெருமான் அருளிச்செய்தது எம்பெருமாட்டிக்கு உணர்த்துவல்' என்று, தலைமகனை வலங்கொண்டு போந்து, தலைமகளுழைச் சென்று, அவள் குறிப்பறிந்து, 'எம்பெருமாட்டி, நம்பெருமான் நம்மைத் தம்மோடு உடன்கொண்டுசெல்லக் கருதுகின்றார், நின்குறிப்பு என்னை?' என்னும்; என்றவிடத்து, உடம்படுதலும் உடம்படாதொழிதலும் என இரண்டல்லதில்லை; சென்று வழிப்படுமேயெனின் நாணிலளாயினளாம்; உடன்படாளாயின் கற்பிலளாயினளாம்; இரண்டினுள்ளும் எத்திறத்தளாயினளோ எனின், நாணுக் கற்பு என்னும் இரண்டல்லவே அவள்கண்ணுள்ளன, அவற்றுள் நாணிற் கற்பு வலியுடைத்து; என்னை வலியுடையவாறு எனின்,

'உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று.'

(களவியல்-உஉ)

என்பதாகலான், நாண் அழியினும் கற்பு அழியாமை நினைக்கும்; நினைத்து, உடன்போக்குநேர்ந்து, தலைசாய்த்து நிலங்கிளையாநிற்கும் நிலைமை இது சொல்லுவதே போன்றது; அதற்குச் செய்யுள் :

## நாணிழந்து வருந்தல்

'ஏணும் இகலும் அழிந்துதெவ் வேந்தரெல் லாமிறைஞ்சிக்
காணும் கழல்நெடு மாறன்செங் கோல்நின்று காக்குமண்மேற்
சேணும் அகலா தடனென்னொ டாடித் திரிந்துவந்த
நாணும் அழியத் தகுகற்பு மேம்பட நைகின்றதே.' (களக)

'அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன் று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
தீம்புனல் நெறிதர வீந்துக் கா அங்குத்
தாங்கும் அளவை தாங்கிக்

காமம் நெறிதரக்

கைந்நில் லாதே.'

(குறுந்-கசஉ)

இன்னும் இது

சொல்லுவதேபோன்றது

அந்நிலைமை :

'சிலரும் பலருங்

கடைக்கண் நோக்கி

மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலத்தனள் அன்னை அலைப்ப

அலைந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குருஉச்சுவற்
கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
அலர்சுமந் தொழிகவிவ் அழுங்க லூரே.' (நற்றிணை, கசகூ)

இங்ஙனம் இவள்

உடன்படும். உடன்பட்டது

உணர்ந்து

வைத்துத் தாயுழைச் செல்லும்; தாயும் மகளது வேறுபாடு கண்டு, உற்றதறியாது, நற்றிறம் படர்ந்து செல்கின்ற கால மன்றே, ஆகலான், கண்டவாறே, 'அன்னாய், என் மகட்கு இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்று? எனக்குச் சொல்லாய்' என்னும். என, 'என்னால் அறியப்பட்டதுஞ் சிறிது உண்டு' என்று அறத்தொடு நிற்குமாறு,

122

இறையனார் அகப்பொருள்

[களவு

'தோழிக் குரியவை கோடாய் தேஎத்து.'

(இறையனார்-கஉ)

என்ற சூத்திரத்திற் சொல்லிப் போந்தாம்; அவ்வகை அறத்தொடு நிற்கும். நிற்கச், செவிலித்தாய் இன்புற்ற மனத்தளாய், 'என்மகள் பெரிது அறிவுடையளேகாண்' என்று, அவ்வாறு நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும். நற்றாயும் இன்புற்ற மனத்தளாய்த் தந்தைக்கும் தன் ஐயன்மார்க்கும் அறத்தொடு நிற்கும். நிற்க, அவரும் அவளது அறிவும் ஆசாரமும் கேட்டு இன்புற்ற மனத்தராய்ச் சொன்மறுத்துத் தலையிறைஞ்சி நிற்பர். இங்ஙனஞ் சென்று மாட்சிப்பட்டுக் காட்டுமே யெனின், பெரிதும் மாட்சிப்பட்டுக் காட்டிற்று. காட்ட, 'இவள் நீரில் ஆற்றிடைப்போய் வருந்துங் குறை யென்னை?' என்று தலைமகனைச் செலவழுங்குவிக்கும்; அவ்வகையாற் சொல்லுமதற்குச் செய்யுள்:

## செல்லுந் தலைவனைச்

## செலவழுங்குவித்தல்

'பாயப் புரவி
கடாய்வந்து பாழிப் பகைமலைந்தார்
தேயச் சிலைதொட்ட தென்னவன்
தேந்தண் பொதியிலின்வாய்
வேயொத்த தோளிநும் மோடு
வரவு விரும்பவுந்தன்

ஆயத் தவரை நினைந்துகண்
ணீர்கொண் டலமந்தவே.'
(௧௭௭)

'விளம்பழங் கமழும்
கமஞ்சூல் குழிசிப்
பாசந் தின்ற தேய்கால்
மத்தம்
நெய்தெரி இயக்கம்
வெளில்முதல் முழங்கும்
வைகுபுலர் விடியல்
மெய்கரந்த தன்கால்
அரியமை சிலம்பு
கழீஇப் பன்மாண்
வரிப்புனை பந்தொடு
வைஇய செல்வோள்

இவைகாண் தோறு
நோவர் மாதோ
அளியரோ அளியரென்
ஆயத் தோரென
நும்மொடு வரவுதான்
அயரவும்
தன்வரைத் தன்றியுங்
கலுழ்ந்தன கண்ணே.’ (நற்றிணை, கஉ)

இதுகேட்ட தலைமகன் செலவழுங்கும். அழுங்க, ‘நாளை நீர் வரைந்து புகுதும்’ என்று தவிர்த்துப் பெயர்ந்து தலைமகளுழை வந்து, ‘நிழலும் நீரும் உடையவாய்க் கானந் தண்ணியவாற் சேறும்’ என்று உடன்போக்கு அழுங்குவித்தவிடத்துத், தலைமகனும் அந்நாள் வரைவொடு விரைந்து புகுவானும். இது வெளிப்பட்ட பின்றைக் கிளவியும் உரியவாயினவாறு.

வெளிப்பட்ட பின்னையும் கிளவி உரிய.

இனி, உம்மையால், உடன்போக்கும் உரித்தாமாறு: அவ்வாறு அறத்தொடுநிலை மாட்சிமைப்பட்டது இல்லையாயின், இரவுக்குறிக்கண் தலைப்பெய்விக்குமாறுபோலத், தலைமகளை

முற்படுத்து உடன்போக்க மாட்சிப்படும்; சொல்லும்; அதற்குச் செய்யுள்:
படுத்து, ஓம்படை

## ஓம்படுத்துரைத்தல்

'கொங்கை தளரினும் கூந்தல் நரைப்பினும் ஏந்தல்மற்றிவ்
அங்கை அடைக்கலம் என்றே கருதி அருள்ககண்டாய்
கங்கை மணாளன் களிமத னன்கடி மாமணற்றி
மங்கை அமரட்ட கோன்வையை நாடன்ன மாதரையே.' (எஅ)

'மென்முலை வீழினும் கூந்தல் நரைப்பினும் விண்ணுரிஞ்சு
நன்மலை நாட இகழல்கண் டாய்நறை யாற்றில்வென்ற
வின்மலி தானை நெடுந்தேர் விசாரிதன் வேந்தர்பெம்மான்
கொன்மலி வேல்நெடுங் கண்ணிணைப் பேதைக் கொடியினையே.' ()

'அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர
இன்கடுங் கள்ளின் இழையணி நெடுந்தேர்க்
கொற்றச் சோழர்
கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட் டியானைப்
போஎர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய இவட்கே.'

'பெருநன் றாற்றிற்
பேணாரும் உளரே

ஒருநன் றுடையள்
ஆயினும் புரிமாண்டு, புலவி
தீர அளிமதி இலைகவர்
பாடமை ஒழுகிய
தண்ணறும் சாரல்
மென்னடை மரையா
துஞ்சும் நன்மலை நாட
நின்னல திலளே.'

(நற்றிணை, க0)

(குறுந்-கக௫)

'நனைழூதிர் ஞாழல் சினைமருள் திரள்வீ
நெய்தல் மாமலர்ப் பெய்த போல'

ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப
தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்டு
அன்னா யென்னுங் குழவி போல

இன்னு செய்யினும் இனிதுதலை யளிப்பினும்
நின்வரைப் பினளென் தோழி
தன்னுறு விழுமம் களைஞரோ இலளே.'

(குறுந்-௩௯௭)



'இவளே நின்னல திலளே யாயும்

குவளை உண்கண் இவளல

திலளே

யானும் ஆயிடை யேனே

மாமலை நாட மறவா நீமே.'

# இவ்வகை ஓம்படுத்துத் தான் தவிரும் என்றவாறு.

தான் தவிர்வதோ செயற்பாலது? போகாளோ? எனின், தனது வருத்தத்திற்குக் கவன்று போகாதாளல்லள், இதனைப் பண்பாக உரைத்தற்பொருட்டுத் தவிரும் என்பது. செவிலித் தாய்க்கு உரைத்தாளன்றே, அவள் அதனைப் பண்பாக உரை யாளோ எனின், இவள் சொல்லியது தெளியுமாறு செவிலித் தாய் சொல்லியது தெளியார் என்றவாறு; என்னை? எப்பொழு தும் கைவிடாத மரபின ளாகலான் என்பது.

இனித், தலைமகளைத் தலைமகன் ஆற்றுவித்துக் சென்றதற்குச் செய்யுள் :

# கொண்டு

மெல்லக்
கொண்டேகல்

'பண்தான் அனையசொல்
லாய்பைய ஏகு பறந்தலைவாய்
விண்டார் படச்செற்ற
கோன்வையை சூழ்வியன்
நாட்டகம்போல்
வண்டார் பொழிலும் மணியறல்
யாறும் மருங்கணைந்து
கண்டார் மகிழுந் தகைமைய
தியாஞ்செல்லுங் கானகமே.' (க௮0)

'சிறியபைங் கட்கரி

மணல்காண் தோறும்

வண்டல் தைஇ

வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே

மானனை கொழுதி மகிழ்குயில் ஆலும் சுடஅகின்ற.

நறுந்தண் பொழில

கானம்

குறும்ப லூரயாஞ்

செல்லும் ஆறே.'

(நற்றிணை, க)

எனத் தலைமகளைத் தன் ஆயத்தோடுஞ் செல்வாள்போலக் கொண்டுசெல்லும். அவ்வகை போவாரை இடைச்சுரத்துக் கண்டாற் சொல்லியதற்குச் செய்யுள் ;

நெறிவிலக்கிக் கூறல்

'அலைமன்னு பைங்கழற் செங்கோல் அரிகேசரியளியார்
இலைமன்னு மாலைமுத் தக்குடை யானிகல் வேந்தரைப்போல்
மலைமன்னும் வெய்யோன் மறைந்தனன் மாதுமெய் வாடினைந்தாள்
சிலைமன்னு தோளண்ணல் சேர்ந்தனை செல்லெஞ் சிறுகுடிக்கே.' ()

இரவு (இருக்க) தாய்

‘நின்றாங் கெதிர்ந்தார்

குருதியுள் ஆழ நெடுங்களத்து

வென்றான் விசாரிதன் கூடலன் ஞாறு மிகமெலிந்தான்
குன்றூர் சுடரோன் மறைந்தனன் கூர்வேல் விடலைதங்கிச்

சென்றால் அழிவதுண்

டோஅணித் தாலெஞ் சிறுகுடியே.’

(௧௮௩)

‘எம்மூர்

பக்கம்
அல்ல தூர்நணித் தில்லை

ஞாயிறு வெம்முரட் செல்வன் கதிரும் ஊழ்த்தனன் மறைந்தனர்.
சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையள் மெல்லியள் மடந்தை
அரிய சேய பெருங்கல் ஆறே.’ (ஐங்குறுநூறு, இணைப்பு-௫)

இன்னும் இடைச்சுரத்துக் கண்டார் இவ்வாறுஞ் சொல்லுப:

# நகரணிமை

## கூடறல்

'நீயும் இவளுமின் றேசென்று சேர்திர்நெல் வேலியொன்ளுர்
தேயும் படிசெற்ற தென்னவன் தென்புனல் நாட்டிளேயோர் மை
வாயும் முகமும் மலர்ந்த கமல மணித்தடத்துப் பொழில்.
பாயுங் கயலவர் கண்போல் பிறழும் பழனங்களே.' (கஅச)

' பிற்றைஞான்று மகளது போக்கு உணர்ந்து செவிலி மயங்கிப் பெரியதோர் கவலேயளாய், 'நெருநலே இவை செய்தது இந்த கருதிப்போலும்' என்னும்; அதற்குச் செய்யுள் :

# 3
# கவன்றுரைத்தல்

'ஒண்முத்த வார்கழற் கைதந்தென் ஊரு வறுமுலையின்
கண்முத்தங் கொண்டு முயங்கிற்றெல் லாங்கரு வெங்கழைபோய்
விண்முத்த நீள்சுரஞ் செல்லிய வோவிழி ஞத்துவென்ற
தண்முத்த வெண்குடை யான்தமிழ் நாடன்ன தாழ்குழலே.' ()



'பெயர்த்தனென்
முயங்கயான் வியர்த்தனென்
என்றனள்
இனியறிந் தேனது
துனியா குதலே
கழல்தொடி யாஅய்
மழைதவழ் பொதியின்

வேங்கையும் காந்தளும்
நாறி

ஆம்பல்
மலரினும் தான் தண் ணியளே.'
(குறுந்-அகூ)

என்று, பின்னுங் கவன்று ஆற்றாளாய், 'இவ்வகைப்பட்ட கானம் இவ்வகைப்பட்டாள் எவ்வகை செல்லுங்கொல்லோ ?' என்னும்; அதற்குச் செய்யுள் :

சுரம்நினைந்திரங்கல்

'வேடகம் சேர்ந்தவெங் கானம் விடலைபின் மெல்லடிமேற்
பாடகம் தாங்கி நடந்ததெவ் வாறுகொல் பாழிவென்ற
கோடக நீள்முடிக் கோன்நெடு மாறன்தென் கூடலின்வாய்
ஆடக மாடங் கடந்தறி யாதஎன் ஆரணங்கே.' (கஅசு)

'இவ்வகை மெல்லியவாகிய அடி இவ்வகை வெய்யவாகிய கானம் எவ்வகை சென்றனகொல்லோ' என்னும்; அதற்குச் செய்யுள் :

அடிநினைந்திரங்கல்

'களிமுத்த வெண்மணல் மேலும் பனிப்பன நண்பன்பின்போய்
முளியுற்ற கானம் இறந்தன போல்மொய்ந் நீறந்திகழும்
ஒளிமுத்த வெண்குடைச் செங்கோல் உசிதன் உறந்தையன்ன
தெளிமுத்த வாண்முறு வற்சிறி யாள்தன் சிலம்படியே.' (கஅஎ)

இனிச், செவிலி பின்சென்றாள் சுரத்திடைக் குரவினொடு புலம்பிச் சொல்லியதற்குச் செய்யுள் :

# குரவொடு வருந்தல்

‘மழைகெழு கார்வண்ணை வானவன் மாறன்வண் கூடலன்ன
இழைகெழு கொங்கையென் பேதையோர் ஏதிலனோடியைந்திக்
கழைகெழு குன்றம் கடப்பவும் நீகண்டு நின்றனையே
தழைகெழு பாவை பலவும் வளர்க்கின்ற தண்குரவே.’ (க௮௮)

‘நினைப்பரும் புண்ணியஞ் செய்தாய் குரவே நெடுங்களத்து
வினைப்பொலி மால்களி றுந்திவென் றான்வியன் நாட்டகத்தோர்
மனைப்பொலி பாவை பயந்தேன் வருந்தவும் நீகடத்துள்
எனைப்பல பாவை பயந்துமெய் தாயோர் இருந்துயரே.’ (க௮௯)

‘வில்லவன் தானை நரையாற் றழிந்துவிண் ணேறவெல்ல
வல்லவன் மாறனெங் கோன்முனை போல்சுரம் வாணுதலாள்
சொல்லவன் பின்சென்ற வாறென்ற போழ்தெனக் குச்சொல்லுமே
பல்லவம் ஆக்கித்தன் பாவை வளர்க்கின்ற பைங்குரவே.’ (க௯0)

சுரத்திடைச் செல்லுந் தலைமகனையும் தலைமகளையும் கண்டு எதிர்வருகின்றார், 'யார்கொல் இவ்வாறு போந்தார்?' எனச் சொல்லியதற்குச் செய்யுள் :

## சுரத்திடைக்கண்டோர் குறிப்பொடுகூறல்

'வில்லான் விறலடி மேலன பொற்கழல்,வெண்முத்தன்ன
பல்லாள்,இணையடி மேலன பாடகம்,பஞ்சவற்கு
நெல்லார் கழனி நெடுங்களத் தன்று நிகர்மலைந்த
புல்லா தவரென, யார்கொல் அருஞ்சுரம் போந்தவரே.' (கககக)

'வில்லோன் காலன கழலே,தொடியோள்

மெல்லடி மேலவும் சிலம்பே, நல்லோர்
யார்கொல் அளியர் தாமே ஆரியர்
கயிறாடு பறையிற்
கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயில் அழுவம்
முன்னி யோரே.'
(குறுந்-எ)

இனிச், செவிலி
எதிர்வருகின்ற பார்ப்பாரைக்
கண்டு
வினயதற்குச் செய்யுள் :

# வேதியரை வினுதல்

‘ நிழலார் குடையொடு தண்ணீர்க் கரகம் நெறிப்படக்கொண்டு
அழலார் அருஞ்சுரத் தூடு வருகின்ற அந்தணிர்காள்
கழலான் ஒருவன்பின் செங்கோற் கலிமத னன்பகைபோற்
குழலாள் ஒருத்திசென் றாளோ உரைமின்இக் குன்றிடத்தே.’

()

‘ குடையார் நிழலுறி சேர்கர கத்தொடு குன்றிடத்து
நடையால் மெலிந்து வருகின்ற அந்தணிர் ஞாலமெல்லாம்
உடையான் ஒளிவேல் உசிதன்தென் கூடலொண் தீந்தமிழ்போல்
இடையாள் விடலைபின் சென்றன ளோவிவ் விருஞ்சுரத்தே.’ ()

சுரத்திடைச் செல்லாநின்ற தலைமகள் நின்ற சூழலும், தலைமகன் எய்த வேழமும் கண்டு செவிலி சொல்லியதற்குச் செய்யுள் :

3

வியந்துரைத்தல்

'செறிகழல் வேந்தரைச் சேஹூர் அமரிற் செருக்கடந்த
நெறிகெழு கோனெடு மாறன் முனைபோல் நெடுஞ்சுரத்து
வெறிகமழ் கோதையிங் கேகின்ற தில்தாம் விடலைதன்கைப்
பொறிகெழு திண்சிலை வாளியின் எய்த பொருகளிறே.' (கக௪)

[illegible]



'கொடுவிற் படைமன்னர் கோட்டாற் றழியக் கணையுதைத்த
நெடுவில் தடக்கையெங் கோனெடு மாறன்தென் நேரிமுன்றல்
இடுவிற் புருவத் தவள்நின்ற சூழல் இதுஉதுவாம்
கடுவில் தொடுகணை யாலண்ணல் எய்த கதக்களிறே. (கக௫)

பின்சென்ற செவிலித்தாய் எதிர்வருவாரைக் கண்டு வினவ, அவ்வினவப்பட்டார் தலைமகளையும் தலைமகனையும் இன்னதோரிடம் சேர்வர்கள் என்னுமதற்குச் செய்யுள் :

## அழுங்குதாய்க்குரைத்தல்

'ஆளையும் சிறும் களிற்றரி சுரம் தேசரி தெவ்வரைப்போல்
காளையும் காரிகை யுங்கடஞ் சென்றின்று காண்பர்வெங்கேழ்
வாளையும் செங்கண் வராலும் மடலிளந் தெங்குகுத்த
பாளையும் தேறல் பருகிக் களிக்கும் பழனங்களே.' (ககசு)

'நகுவா யனபல பெய்துள்ள நட்டாற் றருவரைபோன்று
உகுவாய் மதக்களி றுந்திவெண் ருன்மனம் போன்றுயர்ந்த
தொகுவா யனசுனை சேர்குன்றம் நீங்கலும் துன்னுவர்போய்ப்
பகுவா யனபல வாளைகள்
பாயும் பழனங்களே.'

(ககஎ)

இடைச்சுரத்துப் புலம்புஞ் செவிலியை எதிர்வருவார் கண்டு தெருட்டியதற்குச் செய்யுள் :

இங்குமிவையை

சான்றோர் பால் உள்ள செல்வத்திற்கு
உலகியல்புரைத்தல்

உவமை நிறலாம்

‘கடவரை காதல னோடு கடந்த கயல்நெடுங்கண்
படவர வல்குலும் பாவைக் கிரங்கல்மின் பண்டுகொண்டை (மின்னுதொடி)
வடவரை மேல்வைத்த வானவன் மாறன் மலயமென்னுந்
தடவரை தானே அணிந்தறி யாதுதண் சந்தனமே.’

(கசுஅ)

‘வெந்நீர் அருஞ்சுரம் காளைபின்
சென் றனும் மெல்லியன்மாட்டு
இந்நீர் மையினிரங் கன்மின்
நரையாற் றிகலரசர்
தந்நீர் அழிவித்த சத்ரு
துரந்தரன் தண்குமரி
முந்நீர் பயந்தால் அணிவார்
பிறரென்ப முத்தங்களே.’

(கககூ)

'நெருங்கடல் வேல்நெடு மாறன் நெடுங்களத் தன்றுவென்றான்
பெருங்கடல் ஞாலத்துப் பெண்பிறந் தார்தம்பெற் றார்க்குதவார்
இருங்கடல் போல்துயர் எய்தன்மின் ஈன்றன வென்றுமுந்நீர்க்
கருங்கடல் வெண்சங் கணிந்தறி யாதண் கதிர்முத்தமே.' (உ00)

'எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை அந்தணீர்



வெவ்விடைச் செலல்மாலை ஒழுக்கத்தீர் இவ்விடை
என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரோ பெரும!
காணேம் அல்லேம் கண்டனம் கடத்திடை
ஆணெழில் அண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவரல் தாயிர்நீர் போறிர்;

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;
எனவாங்கு,

இறந்த கற்பினாட் கெவ்வம்
படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச்
சென்றனள்
அறந்தலை பிரியா ஆறுமற் றதுவே.'

(கலி. பாலை-அ)

செவிலி சுரத்திடைச்செல்லாது, மனையகத்திலிருந்து சொல்லும் என்பாருமுளர்; அது [1]பொருந்துமாற்றி னறிந்துகொள்க.

அல்லதூஉம், ஆங்ஙனம்
கழிந்த பின்னை,
புணர்ந்து உடன்போய்ச் சில
நாட்

'அறத்தொடு நிலையின் அஃதறிந் திருந்த
சிறப்புடை மரபின் தெய்வம் அன்ன

இருபெருங் குரவரொடு
பொருவில் ஆற்றல்
தன்னையர் தம்மைச்
சால்புடை மரபின்
மன்னிய சிறப்பின்

மதியோர் தேற்ற

புதுபஞ் பாதல் விதியுளி
தெருண்டபின்

மீண்டு வந்து வியநகர்
விரும்ப

மாண்டகு சிறப்பின்
வரைந்தெய்து மென்ப.'

அவ்வகை மறித்து வாராநின்றாள் சுரத்திடை முன்னுறச் செல்வாரை, 'என் ஆயத்தார்க்கு எனது வரவினைச் சொல்லுமின்' என்னும்; அதற்குச் செய்யுள் :

(பாடம்) 1. பொருந்துமாறு.

வழிச்செல்வோரை வரவுரைமின் என்றல்

'செம்மைத் தனிக்கோல் திறல்மன்னன் சேவூர்ச் செருமலைந்தார்
தம்மைப் புறங்கண்ட சத்துரு தூரந்தரன் தன்முனைபோல்
வெம்மைச் சுரம்வரு கின்றனள்
என்று விரைந்துசெல்வீர்
அம்மைத் தடங்கணென் னையத்
தவருக் கறிமின்களே.' (உ0க)

' கோடரில் நீள்மதிற்
கோட்டாற் றரண்விட்டுக்
குன்றகஞ்சேர்

காடரில் வேந்தர் செலச்செற்ற
மன்னன்கை வேலின்வெய்ய
வேடரில் வெஞ்சுரம்
மீண்டனள் என்று
விரைந்துசெல்வீர்
ஓடரி வாட்கணென் ஆயத் தவருக் குரைமின்களே.'
'கவிழ்மயிர் எருத்திற் செந்நாய் ஏற்றை
(உ0உ)

குருளைப் பன்றி
கொள்ளாது கழியும்

சுரநனி வாரா நின்றனள்
என்பது
முன்னுற விரைந்தனிர்
உரைமின்

இன்னகை முறுவலென்

ஆயத் தோர்க்கே.' (ஐங்குறு-நூகஎ)

அல்லதூஉம்,

'நம் நெடுநகர்க்கே

மகள் வருகின்றுள் எனக் கேட்ட தாய், கொண்டு வருமோ? தன் கடிமனைக்கே கொண்டுபோமோ?' என, அவன் குறிப்பறிதற்கு வேலனைக் கூவியறியும்; அதற்குச் செய்யுள் :

விடை : செய்தி கிளத் தலைவன். ஐநயநுள்ளாவனேயும் இறிக்கும்.

வேலனை வினுதல்

'அங்கண் மலர்த்தார் அரிகே

சரிதென்னர் கோனயில்போல்

வெங்கண் நெடுஞ்சுரம் மீண்ட

விடலை கெடலருஞ்சீர்

நங்கள் மனைக்கே வரநல்கு

மோசொல்லு வேல! நல்கு
தங்கள் மனைக்கே செலஉய்க்கு
மோமற்றென் னைதயலையே.' (உ0ரு)

'உரும்மினை
நீள்கொடி'மேற்கொண்ட செங்கோல்
உசிதன் ஏங்கோன்
செருமுனை போல்சுர மீண்ட
விட்லையெந் தீதில்செல்வத்
திருமனைக் கேவர
நல்குங்கொல் அன்றூய் விடில்
தமர்கள்
பெருமனைக் கேயுய்க்கு
மோவுரை யாய்மற்றென்
பேதையையே.' ()

' அருஞ்சுரம் இறந்தஎன் பெருந்தோள் குறுமகள்
திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே
புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி
௧

மீனமணல் அடுத்து மாலை நாற்றி
உவந்தினி தயரு மென்ப யானும்

௧

மான்பிணை நோக்கின் மடநல் லாளை
ஈன்ற நட்பிற் கருளான் ஆயினும்

இன்னகை முறுவல் எழையைப் பன்னாள்
கூந்தல் வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய

கலம்புனை உதவியோ உடையேன் மன்னே நலம்புனை.
அஃதறி கற்பின் அன்றுமற் றில்ல விரைவு குறிப்புச் சொல்.
அறுவை தோயும் ஒருபெருங் குடுமிச்
சிறுபை ஞாற்றிய பஃறலைக் கருங்கோல்
ஆகுவ தறியும் முதுவாய் வேல
கூறுக மாதோ கழங்கின் திட்பம்
மாறா அரும்பனி கலுழும் கங்குல்
ஆனா தயரும்எம் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தம்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே.'

(அகம்-௧௯௫)

இங்ஙனம் புகுந்து பெயர்ந்த பின்றைத் தலைமகன் தன் அகத்தே வதுவைக் கலியாணஞ் செய்வான் எடுத்துக்கொண் டான் என்பது கேட்ட நற்றாய், 'ஒழிந்த கலியாணஞ் செய்யினும் நம்மகத்தே வதுவைக் கலியாணஞ் செய்வான் நேருங்கொல்லோ காளையைப் பயந்தாள்' என்னும்; அதற்குச் செய்யுள்:

கலியாணம் = மங்கலம்

## நற்றாய் மணவயர் வேட்கையிற் செவிலியை வினதல்

'தாளை வணங்கா தவர்படச்
சங்கமங் கைத்தனது வாளை
வலங்கொண்ட மாறனிவ் வையத்
தவர்மகிழ
நாளைநம் இல்லுள் வதுவை அயர்தர நல்குங்கொல்லோ
காளையை ஈன்ற கடனறி நல்நெஞ்சிற் காரிகையே.'

(உ0௯)

'புல்லா வயமன்னர் பூலந்தை

வான்புகப் பூட்டழித்த
வில்லான் விசாரிதன் கூடல்
விழவினைப் போல்நமில்லுள்
நல்லார் மகிழ்வெய்த நாளை மணஞ்செய்ய நல்குங்கொல்லோ
கல்லார் திரள்தோள் விடலையை ஈன்ற கனங்குழையே.' (உ0சு)

'மையே றியபொழில் மாநீர்க்
கடையன்மன் ஒட்வென்றான்
மெய்யே றியசீர் மதுரை
விழவினைப் போல்நமில்லுள்
நெய்யேர் குழலி வதுவை அயர்தர நேருங்கொல்லோ
பொய்மே புரிந்தவக் காளையை ஈன்ற பொலங்குழையே.'

(உ0எ)

'நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லின் எவனோ மற்றே வென்வேல்

மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே.'

எனக் கொள்க.

(ஐங்குறு-௩௧௧)

(உ௩)

132

இறையனார் அகப்பொருள்

[களவு

## சூத்திரம் - உசு

களவு வெளிப்படா

முன்னுற வரைதல்

களவு வெளிப்பட்ட

பின்றை வரைதலென்று

ஆயிரண் டென்ப

வரைதல் ஆறே.

என்பது என்னுதலிற்றோ

எனின், களவு,

'வெளிப்பட்ட

பின்றைக் கிளவியு முரிய.'

(இறைய-உரு)

என்றமையான், வெளிப்பட்ட பின்றை வரைதல் முறைமையா னல்லது இல்லை எனக் கொண்டுநின்ற மாணாக்கற்கு, மற்றும் வரைதலாறு உண்டென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: களவு வெளிப்படா முன்னுற வரைதல் என்பது—பலரானும் சிலரானும் அறியப்பட்டது இவ்வொழுக் கம் என்னுங் கருத்து எய்தாமுன்னம் வரைதல் என்றவாறு;

இயற்கைப் புணர்ச்சி
தலும் உரியன்,

புணர்ந்த பின்னே தெருண்டு

வரை

அங்குத் தெருளானாய்விடின்,
தெருண்டு வரைதலும் உரியன்,

பாங்கற்கூட்டங் கூடித்

அங்குத் தெருளானுய்விடின், தோழியை இரந்துபின்னின்று அவள் தனையுறுத் தகைமை செய்யத் தெருண்டு வரைதலும் உரியன்,

அங்குத் தெருளானுய்விடின், மதியுடம்படுத்து இரந்து பின்னின்ற நிலைமைக்கண் தோழி சேட்படுப்பத் தெருண்டு வரைதலும் உரியன்,

அங்குத் தெருளானுய்விடின், தோழியிற் கூட்டங் கூடியாதல், செறிப்பறிவுறுக்கப்பட்டாதல், இரவுக்குறியது ஏதம் காட்டவாதல், வரைவுகடாவப்பட்டாதல் தெருண்டு வரைதலும் உரியன்.

ஈதெல்லாம் களவு வெளிப்படா முன்னுறவரைதல் விகற்பமெனக் கொள்க.

இனி, வெளிப்பட்ட பின்றை வரைதல் விகற்பமின்று எனக் கொள்க. அவற்றுள், களவு வெளிப்படா முன்னுற வரைதல் சிறப்புடைத்து. இது தனக்காகாமையால் வரைந்தமையிற் சிறப்பின்று எனக்கொள்க. இது களவு வெளிப்பாடு அன்றென்று மறுத்துக் களவு வெளிப்படா முன்னுற வரைதல், அறத்தொடுநிலை நிகழாமுன் வரைதல் என்றவாறு.

.. (

<u>களவு வெளிப்பட்ட பின்றை வரைதல்</u> என்பது—அறத் தொடுநிலை நிகழ்ந்த பின்றை வரைதல் என்றவாறு ;

களவு வெளிப்படா முன்னுற வரைதலும் களவு வெளிப் பட்ட பின்றை வரைதலும் ஆமாறு முன்னே சொல்லிப் போந் தாம்; அவ்வுரையே இதற்கும் உரைத்துக்கொள்க.

என்று ஆயிரண்டு என்ப வரைதலாறு என்பது—என்று இரண்டு வகை என்பர் வரைதல் முறை என்றவாறு. (உச)

சூத்திரம் - உரு

பட்ட பின்றை வரையாக் கிழவன்
நெட்டிடை கழிந்து பொருள்வயின் பிரிதலும்
பொருள்வயின் பிரியா தொருவழித் தணத்தலும்
புரைவ தென்ப கற்பால் ஆன.

என்பது என்னுதலிற்றோ எனின், அறத்தொடு பின்றை வரும் விகற்பம் உணர்த்துதல் நுதலிற்று.

நிலைநின்ற

மேற் சூத்திரத்து வரையும் இடம் உணர்த்தினர், அவ் வரைவிற்கு வரும் இடையீடு இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இனித், 'தலைமகனை வரைந்தெய்தினனல்லன், அறத்தொடு நின்றவாறே பிரிந்தான், ஆகலான், அன்னாள் கற்பினளோ? களவினளோ?' என்ற மாணாக்கற்கு, இவள் கற்பினளே எனப் படும் என்றவாறு.

இதன் பொருள்: பட்ட பின்றை வரையாக் கிழவன் என்பது — அறத்தொடு நிலைநின்ற பின்றை வரைந்தெய்தாத தலைமகன் என்றவாறு; நெட்டிடை கழிந்து பொருள்வயிற் பிரிதலும் என்பது — நாடும் காடும் இடையிட்ட பல்காதமும் நீங்கிப் பொருட்குப் பிரியும் பிரிவும் என்றவாறு; பொருள் வயிற் பிரியாது ஒருவழித்தணத்தலும் என்பது — பொருட்குப் பிரியாது ஓரிடத்தினனாய் உறைதலும் என்றவாறு; புரைவது என்ப் கற்பால் ஆன என்பது — அவை பொருந்தும் கற்பின ளாகற்கு என்றவாறு.

அறத்தொடு நிலைநின்றமை என்னை தலைமகன் அறியுமாறு எனின், தோழியால் உணர்த்தப்பட்டு அறியும் என்பது.

இதன் கருத்து, இவ்விரண்டு இடையீட்டின்கண்ணும் தலைமகள் ஆற்றாளாய காலத்துத் தோழி ஆற்றுவித்தலும்,

ஆற்றுவித்து அதனெதிர் மொழிதலும், பிறவும் எல்லாம் கற்பி ஞெடு ஒக்கும் என்பது.

இப்பிரிவு தலைமகள் அறியப் பிரியுமோ எனின், அறியவே பிரியும், தோழிக்கும் தலைமகட்கும் எல்லாம் உணர்த்தி என்பது. அவ்வாறு பிரிந்தவிடத்துத் தலைமகள் வேறுபட்டாள்; வேறு பட, 'எம்பெருமான் இதற்கு நல்லதுபுரிவான் பிரிவான்; பிரிய, நீ ஆற்ருயாவதோ தகாது' என்ற தோழிக்கு, 'யான் பிரிய ஆற்றேனுயினேன் அல்லேன்; அவர் சென்ற கானத்துத் தன் மையை நோக்கி அவர்க்குக் கவன்று நினைந்து ஆற்றேனுயினேனை ஏதிலர் அதனைத் திரிய உணர்ந்தார்' என ஊர்மேல் வைத்துச் சொல்லும்; அதற்குச் செய்யுள் :

தலைவி

ஊரவர்தன்மை கூறல்

'மின்ருனனைய
விளங்கொளி வேலொடு
வெண்திரைமேல்
நின்ருனிலமன்ன னேரியன்
மாறன் இகன்முனைபோற்

கொன்று றலைக்குஞ் சுரமன்பர்
நீங்கலுங் கோல்வளைகள்
சென்று லதுபிறி தாகவிவ்
வூரவர் சிந்திப்பரே.'
(உ0அ)

## இயற்பட மொழிதல்

இப்பிரிவின்கண்ணே ஆற்றாளாய் வேறுபட்ட தலைமகளை இவ்வாறன்றி ஆற்றுவிக்கலாகாது எனக் கருதித் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழியும்; அதற்குச் செய்யுள் :

'தொல்கவின் தொலையத் தோள்நலம் சாஅய் (அருங்க) தை.

நல்கார் நீத்தனர்
ஆயினும் நல்குவர்
நட்டனர் வாழி தோழி
குட்டுவன்
அகப்பா அழிய நூறிச்

செம்பியன்
பகற்றீ வேட்ட ஞாட்பினும்
மிகப்பெரிது
அலரெழச் சென்றனர்
ஆயினும் மலர்கவிந்து

மாமடல் அவிழ்ந்த
காந்தளஞ் சாரலின்
ஞால்வாய்க் களிறு
பாந்தட் பட்டெனத்

துஞ்சாத் துயரத் தஞ்சுபிடிப் பூசல்
நெடுவரை விடரகத் தியம்பும்

கடுமான் புல்லிய
காடிறந் தோரே.'

இயற்பழிக்கும்; எங்ஙனம் இயற்பழிக்குமோ எனின், 'இவளை இங்ஙனம் ஆற்றாளாகப் பிரிந்த அவரினுங் கொடிய, இவளது ஆற்றாமை கண்டும் அதற்கு நல்லது புரியாது தம் நாணின்மை யாற் பகலே புகுந்து இரைதேர்கின்ற நாணுப் பறவைகள் என்னும்; அதற்குச் செய்யுள் :

'இகலே புரிந்தெதிர் நின்றதெவ் வேந்தர் இருஞ்சிறைவான்
புகலே புரியவென் றுன்கன்னி அன்னாள் புலம்புறநோய் மிகவே
மிகலே புரிகின் றதுகண்டும் இன்றிவ் வியன்கழிவாய்ப்
பகலே புரிந்திரை தேர்கின்ற நாணுப் பறவைகளே.' (உ0க)

என்பது கேட்ட தலைமகள், 'என் ஆற்றாமை கண்டன்றே இவ்வ் இவ்வகை சொல்லுவாளாவது' எனத் தனது ஆற்றாமை நீங்குவாளாவது பயன்.

இனி, ஒருவழித்தணந்தவிடத்துத் தலைமகள் வேறுபட 'இவ்வகைப்பட்ட நிலத்தில் தலைமகன் நம்மைத் துறவான், நீ எற்றிற்கு ஆற்றாயாகின்றாய்?' எனத் தோழி சொல்லியதற்குச் செய்யுள் :

'அடுமலை போல்களி யானை அரிகே சரிஉலகின்
வடுமலை யாதசெங்
கோல்மன்னன் வஞ்சியன்
னாய்மகிழ்ந்து
படுமலை போல்வண்டு
பாடிச்செங் காந்தட்பைங்

தேன்பருகும்
நெடுமலை நாடனை நீங்குமென்
றோநீ நினைக்கின்றதே.' (உ௪0)

> ‘குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற் பாய
> அழலெரியின் மூழ்கினவால் அந்தோ அளியவென் றயல்வாழ் மந்தி
> கலுழ்வனபோல் நெஞ்சசைந்து கல்லருவி தூஉம்
> நிழல்வரை நன்னாடன் நீப்பனோ அல்லன்.'

எனக் கொள்க. (உரு)

## சூத்திரம் - உகூ

வெளிப்படை
தானே விரிக்கும் காலைத்

தந்தை தாயே
தன்னையர் என்றாங்கு

அன்னவர்
அறியப் பண்பா கும்மே.

என்பது என்னுதலிற்றோ எனின், மேல் வெளிப்படையே சொல்லிப் போந்தார், அவ்வெளிப்படை இவை யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : வெளிப்படை தானே என்பது—களவு வெளிப்படை தானே என்றவாறு; விரிக்குங் காலை என்பது—

விரித்து உணர்த்தும் இடத்து என்றவாறு; தந்தை தாயே தன்னையர் என்றாங்கு அன்னவர் அறியப் பண்பு ஆகும்மே என்பது — தந்தை தாய் தன்னையர் என்று அவர் அறியப் பண்பாகும் என்றவாறு.

பண்பு எனினும், இலக்கணம் எனினும், இயல்பு எனினும் ஒக்கும். வெளிப்படை யென்பது அறத்தொடுநிலை என்றவாறு. வெளிப்படை எனினும், அறத்தொடுநிலை எனினும் ஒக்கும் என, இவ்விரண்டும் ஒரு பொருள்மேற் கிடந்தனவாயினும், கருத்து வேறுபாடுடையவாம். யாவரும் அறியப் படாத களவு, தந்தையும் தாயும் தன்னையரும் அறியப் பாடு நிகழ்ந்தமையின், களவுவெளிப்படை யெனப்பட்டது; இனித், தலைமகள் அறன் அழியாமை நிற்றலின், அறத்தொடுநிலை யெனவும் பட்டது. (உசா)

# அவருள்

## சூத்திரம் - உஎ

# தாயறி

# வுறுதலின் ஏனோரும்

# அறிப.

என்பது என்னுதலிற்றோ எனின், இவர்தாம் அறியுமிடத்துத் தாய் சொல்லவன்றித் தாமாக அறிவிலர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: அவருள் என்பது — மேற்கூறப்பட்ட மூவருள்ளும் என்றவாறு; தாய் அறிவுறுதலின் ஏனோரும் அறிப என்பது — தாய் அறிவுறுக்கப்பட்டுத் தந்தையும் தன்னையன்மாரும் அறிவர் என்றவாறு.

எனவே, செவிலித்தாய் தோழியால் அறத்தொடு நிற்கப்பட்டு நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும்; அம்முறையானே, நற்றாய் தந்தைக்கும் தன்னையன்மார்க்கும் அறத்தொடு நிற்கும் என்பது.

செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும் என்பது பெற்றவாறு என்னை யெனின், உரையிற்கோடல் என்னுந் தந்திரவுத்தியாற் பெறுதும் என்பது. (உஎ)

## சூத்திரம் - உஅ

தந்தை தன்னையர் ஆயிரு வீற்றும்
முன்னம் அல்லது கூற்றவண் இல்லை.

என்பது என்னுதலிற்றோ எனின், தந்தைக்கும் தன்னையன்மார்க்கும் நற்றாய் அறத்தொடு நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: தந்தை தன்னையர் ஆயிரு வீற்றும் என்பது—தந்தை என்றும் தன்னையன்மார் என்றும் சொல்லப்பட்ட இரண்டு கூற்றார்க்கும் என்றவாறு; முன்னம் அல்லது கூற்று அவண் இல்லை என்பது—அவர்க்கு முன்னத்தானல்லது செவ்வனஞ் சொல்லப்பெறாள் என்றவாறு.

அஃதாமாறு:: நற்றாய் தந்தைக்கும் தன்னையன்மார்க்கும் அறத்தொடு நிற்குமிடத்து, 'இன்னதொன்றுண்டால், அஃது என்னோ எனின், குலத்தானும் குணத்தானும் செல்வத் தானும் மிக்கான் ஒருவன், உலகத்தாரெல்லாம் ஒருகுறை வேண்டப்படுந் தன்மையன், தான் ஒருவர்பால் ஒருகுறை வேண்டுஞ் சிறுமையானல்லன், இத்தன்மையானவன் நம்மை வழிபட்டு வாழலுறும், அவனை யாம் கிழமைகொள்ள அழிவ துண்டோ?' என்னும்; என, அதுகேட்டு, அவர் என் கருது பவோ எனின், 'இவள் கருதிச் சொல்லுகின்ற குறிப்பாவது இதுபோலும், தன்மகள் திறத்தினதாகாதே' என உணர்வாராவது.

'அவண்' என்ற மிகைவாய்பாட்டான், முன்னத்தானன்றி யும் முன்னம்போலுஞ் சொல்லானும் சிறுபான்மை சொல்லப் பெறும் என்பது.

அது வருமாறு: தலைமகன் பார்ப்பாரை முன்னிட்டு அருங் கலங்களோடு வரைவுவேண்டி விட்டஇடத்துத் தந்தையும் தன்னையன்மாரும் வரைவு மறுத்தார், மறுப்பார் சூழ்தலும் அருகுதலும் உடைமையான், நூற்றியாட்டைக் கருமம் நூற் றவரோடு எண்ணிச் செய்யப்படுமாகலாற் சூழப்படும்.

இனிக், 'கண்டீரே, தம்மகளை வேண்டுவாரைப் பார்த்திருந் தாராகாதே, நாம் இந்நூற்றிடைக் கருமநூற்றவரே, இவர்க ளிடை மகட்பெறுவார் யார்!' எனவும், 'பெறுதற்கு அருமை யுடைத்து' எனவும் கருத அருகுப.

இனிக், 'கண்டீரே, தம்மகளை வேண்டுவார் உரைப்பனவும் பொய்போலும்' வேண்டுதற்கு இடையின்றியே பெற்றாரயின்,

'இவ்வகை விரைந்து
நோக்கியும் அருகுப.

கொடுத்தாரால்' என்னும்

புறவுரை

அல்லதூஉம், இறப்பச் சிறியாரும், தம்மின் மிக்கார், மகள் வேண்டிச் சென்றவிடத்தும் அருகுப.

இனி, உலகியலானும்
அருகுப.

அல்லது, உலகியல்பல்லாவழி இவர் அருகுவதற்குச் சொல்லவேண்டுமோ என்பது; எனத், தலைமகன் வரைவு மறுக்கப்பட்டான் என்பதனை உணர்ந்த தலைமகள் ஆற்றாளாகத், தோழி யாய்க்கு அறத்தொடு நிற்ப, செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடுநிற்கும்; அவள் தந்தைக்கும் தன்னையன்மார்க்கும் அறத்தொடு நிற்கும், முன்னம்போலுஞ் சொல்லான் என்றவாறு. அவ்வாறு சொல்லுவதற்குச் செய்யுள் :

அறந்தொடு

நிற்றல்

'சான்றோர் வரவும்
விடுத்தவர் தந்தக வும்நுமது
வான்தோய் குடிமையும்
நோக்கின்அல் லால்வண்
பொருள்கருதின்
தேன்தோய் கமழ்கண்ணிச்
செம்பியன் மாறன்செங்
கோன்மணந்த

மீன்தோய் கடலிடம் தானும்
விலையன்றிம் மெல்லியற்கே.' (உகக)
'நடையால் இதுவென்று
நேரினல் லால்நறை யாற்றுவென்ற
படையான் பணிமுத்த
வெண்குடை வேந்தன்பைங்
கொன்றைதங்
சடையான் முடிமிசைத்
தண்கதிர்த் திங்கள்தன் தொல்குலமா
[கும்
உடையான் உசிதன் உலகும்
விலையன்றிவ் ஒண்ணுதற்கே.' (உகஉ)
'சான்றோர் வருந்திய
வருத்தமும் நுமது
வான்தோய் வுன்ன

குடிமையும் நோக்கித்
திருமணி வரன்றும்
குன்றம் கொண்டிவள்
வருமுலை யாகம்
வழங்கினோ நன்றே

அஃதான்று,

அடைபொருள்
கருதுவிர் ஆயின் குடையொடு
கழுமலம் தந்த நற்றேர்ச்
செம்பியன்
பங்குனி விழவின்
வஞ்சியோடு
உள்ளி விழவின்

உறந்தையும்'சிறிதே.'

என இவ்வாறு நற்றாய்

சொல்லக் கேட்டுக் கொடாது

விடின், இக்குலத்துக்கு வடுவுண்டுபோலும் என உணர்வாராவது. அதனாற் போந்த பொருள் அறத்தொடுநிலை மாட்சிப்படுவது. (உஅ)

சூத்திரம்-உகூ]

இறையனார் அகப்பொருள்

139

சூத்திரம் - உகூ

காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்
நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்
வரைவெதிர் கொள்ளாது தமரவண் மறுப்பினும்
அவனூ றஞ்சுங் காலம் ஆயினும்
அந்நா லிடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ
அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே.

என்பது என்னுதலிற்றோ எனின், மேற் சூத்திரத்துள் அறத்தொடு நிற்கும் நிலை உணர்த்திப் போந்தார்; இனி, அறத்தொடு நிற்கும் இடம் கூறுவான் எடுத்துக்கொண்டார் என்பது, அஃது உணர்த்துதல் நுதலிற்று.

மேற்சூத்திரத்தோடு இயைபு என்னையோ எனின், மேல் அறத்தொடுநிலை யதிகாரம் வாராநின்றதாகலான் என்பது.

இதன் பொருள்: காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும் என்பது—காவல் கைமிகப்பாட்டின் வேட்கை பெருகினும் என்றவாறு; நொதுமலர் வரையும் பருவம் ஆயினும் என்பது — அயலார் வரைந்துபுகுங் காலமாயினும் என்றவாறு; வரைவு எதிர்கொள்ளாது தமர் அவண் மறுப்பினும் என்பது—வரைவு ஏற்றுக்கொள்ளாது தமர் அவ்விடத்து மறுப்பினும் என்றவாறு; அவன் ஊறு அஞ்சும் காலம் ஆயினும் என்பது— அவற்கு நிகழும் ஏதம் அஞ்சின இடத்தும் என்றவாறு; அந்நாலிடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ என்பது—அந்நாலிடத்தும் மெய்க்கண் நின்ற நாண் நீங்கி என்றவாறு; அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே என்பது—அறத்தொடு நிற்கும் நிலைமை தோழிக்கும் உரித்து என்றவாறு.

'காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்' என்பது—காப்பு என்பது இரண்டு வகைத்து, நிறைகாவல் சிறைகாவல் என.

அவற்றுள், நிறைகாவல் என்பது—காப்பன கடிவன கூடிந்து ஒழுகுதல் என்றவாறு,

'சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்

காத்துக்

நிறைகாக்கும் காப்பே தலை'

(குறள்-௫௭)

என்பதாகலான்.

இனிச், சிறைகாவல் என்பது—தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர்கடுகுதல், நிலவுவெளிப் படுதல், கூகைகுழறல், கோழிகுரற்காட்டல் என இவை.

அவற்றுள், ஈண்டுச் சிறைகாவல் கொள்ளப்படும். அச் சிறைகாவலது மிகவின்கண் இடையீடாம்; இடையீடாயின விடத்துத் தலைமகட்குப் பெரியதோர் வேறுபாடு உண்டாம்: உண்டாயினவிடத்துத் தோழிக்குப் புலனும்; புலனாயினவாறே யாய்க்கும் புலனும்; புலனாயினவிடத்து, யாய் அறிவாரை வினவும்; வினவினவிடத்து, அறிவார் தெய்வத்தினான் ஆயிற்று என்ப; அது சொல்லுதற் பயத்தது தம் கருமமாகலானும், பிறிதொன்று சுட்டியுணருந் தன்மைத்தன்று இக்குலமாகலானும் தெய்வத்தினான் ஆயிற்று என்ப. என்றவிடத்து, இவளை முன்னிறீஇத் தெய்வத்திற்கு வழிபாடு செய்விக்கும் செய்த விடத்துக் கற்பழியும் இவட்குக் கற்பழிவு வந்ததென்றும், இவட்கு ஆற்றாமை தணியாதன்றே தெய்வத்தினான் ஆயிற்று என்றமையின் பெயர்த்தும் அதுகண்டு யாய்க்கு ஆற்றாமை பெருகுமென்றும் தலைமகளது கற்பழிவுக்கும் தாய் ஆற்றாமைக்கும் தோழி தான் ஆற்றாளாம். ஆற்றாமை யென்பது பிறிதெவ்வுணர்வுமின்றி ஆற்றாமை தானே யாவது. ஆற்றாமை ஆற்றுவதொன்றனைப் பற்றும். ஆற்றுவது பிறிதின்மையின் அறிவாரை வினவும்; வினவுமிடத்து என்னை வினவும்; யான் அறியேன் என்றதன் புறத்தாம் பிறரை வினவுவா ளாவது; என்னை வினவினவிடத்து இது சொல்லுவன் என்று கூட்டமில் நாட்டவகையாற் சிந்தித்துக்கொண்டிருக்கும். இருந்த நிலைமைக்கண், தாய் படிமக்கலத்தொடும் புகும்; புக்கு, மகளை அடியிற்கொண்டு முடிகாறும் நோக்கி, 'அன்னாய், என் மகட்கு இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்று?' என்னும். என்ற விடத்து, 'என்னால் அறியப்படுவதுஞ் சிறிது உண்டு' என்று மேற்சொல்லியவாறே மாறுகோள் இல்லாத வகையான் அறத்தொடு நிற்கும்; அங்ஙனம் அவள் நற்றாய்த் தொடக்கத்தார்க்கெல்லாம் அறத்தொடு நிற்கும் என்பது.

இனி; 'நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்' என்பது— நொதுமலர் என்பார் ஏதிலர், அவர்தாம் வரைவொடு வந்தார் என்பது கேட்டவிடத்துத் தலைமகள் ஆற்றாளாம்; ஆற்றாளாயினவிடத்து, மேற்சொல்லியவாறே தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நிற்கும் என்பது.

'வரைவெதிர்கொள்ளாது தமர் அவண் மறுப்பினும்' என்பது—தலைமகன்தமர் பார்ப்பார் சான்றோரை முன்னிட்டு அருங்கலங்களோடும் வரைதற்கும் புகுவார்; புக்கவிடத்து, ஒருகாலைக்கு மறுப்பர் பிற, போதாக் குமரியை உடையார்போலக் கதுமென நேர்ந்திடாரன்றே! பரியம் சிறிது என்றானும், இளையாளரால் என்றானும், நாளும் புள்ளும் திருத்தி வாரீரோ என்

சூத்திரம்-உகூ]

ருனும் அங்ஙனம் தமர்மறுத்தார் என்பதனைத் தலைமகள் கேட்ட ஞான்றும் ஆற்றுளாம். என்னை, 'நம்பெருமான் ஒருவர்க்கு ஒருகுறை முடிப்பினல்லது ஒருவரை ஒருகுறை வேண்டுந் தன்மையன் அல்லன்; அல்லாதான் இக்குறை வேண்டியது என்கண் கிடந்த அருளாகாதே! இவற்கு இவ்விளிவரவு ஆக்கினேன் பாவியேன்!' எனவும், 'எம்பெருமாற்கு மறுத்தார், இனி மற்றொருவாறுகாதே!' எனவும் தலைமகள் வேறுபடும். அவ்வேறுபாடு தோழிக்குப் புலனும்; புலனுயினவிடத்து மேற்சொல்லியவாறே அறத்தொடு நிற்கும் என்பது.

'அவன் ஊறு அஞ்சுங் காலம் ஆயினும்' என்பது — தலைமகன் இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற நிலைமைக்கண் 'எம்பெருமான் வரும்வழி, எண்கும் வெண்கோட்டியானையும் அரவும் உருமும் புலியும் வரையரமகளிரும் வானரமகளிரும் உடைத்து, மற்றும் தெய்வங்கள் வௌவும் வண்ணத்தன, ஏதம் நிகழ்வது கொல்லோ!' என வேறுபடும். அவ்வேறுபாடு தோழிக்குப் புலனும்; புலனுயினவிடத்து மேற்சொல்லியவாறே அறத்தொடு நிற்கும் என்பது.

**'அங்காவிடத்தும்'**
**இடத்தும் என்றவாறு;**

**என்பது—அச்சொல்லப்பட்ட நான்கு**

'மெய் நாண் ஒரீஇ' என்பது—மெய்க்கண் நின்ற நாண் நீங்கி என்றவாறு; நாண் உண்டாயினவிடத்துத் தாய்முன் நின்று சொல்லாள் என்பது.

'அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே' என்பது—அறம் என்பது தக்கது; தக்கதனைச் சொல்லிநிற்றல் தோழிக்கும் உரித்து என்றவாறு; அல்லதூஉம், பெண்டிர்க்கு அறம் என்பது கற்பு, கற்பின் தலைநிற்றல் என்பதூஉமாம்.

'இனித், 'தோழிக்கும் உரித்து' என்ற உம்மையால், தலைமகட்கும் அறத்தொடுநிலை உரித்து என்பது. அஃதாமாறு: இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தானும், பாங்கற்கூட்டம் கூடியானும் தெருண்டு வரைந்தெய்தலுற்றுத் தமரைவிடும்; விட்டவிடத்து அவர் மறுப்பர், அஃது இலக்கணமாகலான். அங்ஙனம் மறுத்தவிடத்துத் தலைமகள் வேறுபடும். 'எம்பெருமான் மறுக்கப்பட்டமையான் மற்றொருவாற்றுங்கொல்லோ!' எனக் கலங்கி வேறுபடும்: வேறுபாடு எய்தினபொழுதே தோழிக்குப் புலனும்; புலனாயினவிடத்து, 'எம்பெருமாட்டி, நினக்கு இவ்வேறுபாடு எற்றினாயிற்று?' என்னும். என்றவிடத்து, இஃது எனக்குப்பட்டது, இன்னவிடத்து ஒருஞான்று நீயும் ஆய

# இறையனர் அகப்பொருள்

## [களவு

மும் தழையும் கண்ணியும் கோடற்கு, என்னிற் சிறிது நீங்கினையாக, ஈங்கு நின்றேன் ஒரு மணிச்சுனை கண்டேன்; அம் மணிச்சுனைதான் ஆம்பலே குவளையே நெய்தலே தாமரையே என்றிப் பூக்களால் மயங்கி மேதக்கது கண்டு, வேட்கையான் ஆடுவான் இழிந்தேன்; இழுக்கிக் குட்டம் புக்கேன்; புக்குத்: "தோழியோ!" என, நீ கேளாயாயினை' ஆக, ஒரு தோன்றல் வந்துதோன்றி எனது துயர் நீக்குதற்காகத் தன் கைநீட்டினன்; நீட்ட, யானும் மலக்கத்தான் நின் கையெனப் பற்றினேன்; பற்ற, வாங்கிக் கரைமேல் நிறீஇ நீங்கினன்: நீ அன்று கவலுதியெனச் சொல்லேன் ஆயினேன்: நீ எவ்வெல்லைக்கண்ணும் கைவிடாதாய் அஞ்ஞான்று கைவிடுவா யாயிற்று, விதியாகாது எனிற் பிறிதொன்றுவதுகொல்லோ? எனக் கலங்கி வேறுபட்டேன்' என்று தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநிற்கும், பின்னைத்தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும், மேற்சொன்ன வாற்றான் என்பது. "விதியாகாதேல் பிறிதொன்றுவதுகொல்லோ? எனக் கலங்கி அவன் கைப் பற்றி மீண்டேன்" — என்றான் தலைவி.

அங்ஙனமாயின், தோழி காவலொடு மாறுகொள்ளாதோ எனின், கொள்ளாது, தோழிக்கு அறத்தொடு நிற்குமாகலான் என்பது. காவலொடு மாறு கொள்ளினும் காவற்குற்றப் பட்டேன் என்று தோழி இறந்துபடாமைக் காக்கும் விதி என்பது. அஃதே யெனின், நிகழ்ந்த ஒழுக்கம் மறைத்துக் களைந்து, படைத்துமொழிந்தமையாற் பொய்யுரைத்தவாறும்பிற எனின், பொய்யுரைக்கப்பட்டதாகாது; என்னை, பழியும் பாவமும் அதனல் வாராமையின்.

என்னை,

'பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.'

(குறள்-உ௯உ)

என்றாராகலின்

குற்றமின்று என்பது.

அறத்தொடு நிற்கும் இடங்களைப் பெயரும் முறையும் சொல்லினமாத்திரையே இச்சூத்திரத்துப் பொருள். அறத்தொடுநிற்கும் இலக்கணமும், அவற்றுக்குச் செய்யுளும் மேலே காட்டிப்போந்தாம். (உ௯)

## சூத்திரம் - ௩௰

காம மிக்க கழிபடர் கிளவியும்
காப்புச் சிறைமிக்க கையறு கிளவியும்
ஆறுபார்த் துற்ற அச்சக் கிளவியும்
இரவினும் பகலினும் நீவரு கென்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
தன்னுள் கையா றெய்திடு கிளவியும்
அன்ன மரபின் பிறவும் தொகைஇத்
தன்னை அழிந்த கிளவி எல்லாம்
வரைதல் வேட்கைப் பொருள என்ப.

என்பது என்னுதலிற்றோ எனின், ஃவரைவுகடாவும் மெல்லாம் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

# இலக்கண

மேலதனோடு இயைபு என்னையோ எனின், மேலுங் களவு நீக்கிக் கற்பாவதோர் இலக்கணம் உணர்த்தினர்: இவ்வரைவும் அன்னதாகலான் அதன் பின்னே வைக்கப்பட்டது.

இதன் பொருள்: காமம் மிக்க கழிபடர் கிளவியும் என்பது—காமம் என்பது வேட்கை, மிகுதல் என்பது பெருகுதல், கழி என்பது சிறத்தல், படர் என்பது நினைத்தல், கிளவி என்பதுசொல், வேட்கைமிக்குச் சிறப்பச் சிந்தித்துச் சொல்லுஞ் சொல்லும் என்றவாறு; காப்புச் சிறைமிக்க கையறு கிளவியும் என்பது—காப்புச்சிறை மிகவினாற் கையற்றுச் சொல்லுஞ் சொற்களும் என்றவாறு; ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவியும் என்பது—அவன் வரும் வழியது ஏதஞ் சிந்தித்து ஆற்றுளாய்ச் சொல்லுஞ் சொற்களும் என்றவாறு; இரவினும் பகலினும் நீவருக என்றலும் என்பது—இரவின்கண்ணும் பகலின்கண்ணும் நீயிர் வந்து ஒழுகுவது ஆகாதோ எனச்சொல்லுஞ் சொற்களும் என்றவாறு; கிழவோன்றன்னை வாரல் என்றலும் என்பது—தலைவனை இரவின்கண்ணும் பகலின்கண்ணும் வரவேண்டா என்று சொல்லுஞ் சொற்களும் என்றவாறு; தன்னுள் கையாறு எய்திடு கிளவியும் என்பது—தன்னுட் கையாற்றினை ஏதிலது ஒன்றின்மேலிட்டுச் சொல்லுஞ் சொற்களும் என்றவாறு; அன்ன மரபிற் பிறவும் தொகைஇ என்பது—அன்ன இலக்கணத்த பிறவுந் தொகுத்து என்றவாறு; தன்னை அழிந்த கிளவி எல்லாம் என்பது—தன் ஆற்றாமையாற் சொல்லுஞ் சொல்லெல்லாம்;

என்றவாறு; வரைதல் வேட்கைப் பொருள என்ப என்பது—வரைதல் வேட்டுச் சொல்லுஞ்சொல் என்றவாறு.

## காமமிக்க கழிபடர்கிளவி

இனிக், 'காமமிக்க கழிபடர் கிளவி' யாமாறு: பகற்குறியானும் இரவுக்குறியானும் தலைமகன் ஒழுகாநின்ற நிலைமைக்கண் ஒருநாள் ஒருகாற் கண்டு தரிக்குந் தன்மைத்தன்றாம் வேட்கை; என்னை, காணும் பொழுதிற் காணாப்பொழுது பெரிதாகலான். அவ்வகை வேட்கையளாய் நின்று புன்னைக்கானும் அன்னத்திற்கானும் கடலிற்கானும் கழிக்கானும் அவ்வகை பிறவற்றிற் கானும் [1]தன்கட்பொறை தணிப்பனவாகச் சிந்தித்துச் சொல்லுவதாயிற்று; அதற்குச் செய்யுள்:

'தாதலர் நீள்முடித் தார்மன்னன் மாறன்தண் ணங்குமரிப்
போதலர் கானற் புணர்குறி வாய்த்தாள் புலம்பிரைய
ஏதலர் நோய்செய்வ தோநின் பெருமை எனநெருங்கிக்
காதலர் தம்மைக் கழறினென் னானங் கருங்கடலே.' (௨௧௩)

' ஒண்தூவி நாராய்நின் சேவலும் நீயுமாய்
வண்டூது பூங்கானல் வைகலும் சேறிரால் எதன்.

ஆல் - அகை

பெண்தா து வந்தேம் எனவுரைத்தெம் காதலரைக்
கேட்டு கண்டீர் கழறியக்கால் கானல் கடிபவோ.' உறைப்பதல்(அதனே)

இவை கடலுக்கும் நாரைக்கும் சொல்லிய எனக்கொள்க.

"இதனைத் தலைமகன் கேளா வருமேயெனின், 'இங்ஙனம் வந்தொழுக இவள் ஆற்றாளாம்' என்று ஒருவகையான் முற்பட்டுப் பிற்றைஞான்று வரைவொடு புகுவானும்; தோழி கேட்குமேயெனின், தலைமகனை முன்னின்று வரைவுகடாவுவாளாம்; யாருங் கேட்பாரில்லையெனின், ஆற்றுதலைப் பயக்கும். என்னை, மூடிவேவாநின்றதோர் கலத்தை மூய்திறந்தவிடத்து அகத்துநின்ற வெப்பங் குறைபடும்; அதுபோல, இவட்கும் அயர்வுயிர்ப்பாம், அச்சொற்கள் புறப்படுதலான் என்பது." இம்மூன்றினுள் ஒன்றுகாமையில்லை யென்பது. தலைமகன் கேட்பின் இன்னதொன்றும், தோழிகேட்பின் இன்னதொன்றும், யாருங் கேட்பாரில்லையாயின் இன்னதொன்றும் என்று ஒரு பயன் சிந்தித்துச் சொல்லுமோ எனிற், சொல்லாள்; குழவி அழுதாற்போல வேட்கை மிகுதியாற் சொல்லினவிடத்து அப்பயன் நிகழும். குழவி அழுகின்றது, 'எனக்குப் பால் தம்மின்; நீர் ஆட்டுமின்' என்றழாது, துக்கம் வந்ததற்க அழும்; அழ, அறிவார் பயம் எய்துவிப்பர் என்பது.

(பாடம்) 1. தன்கட்டுறு குறை.

# சூத்திரம்-௩௦]

காப்புச் சிறைமிக்க கையறுகிளவி

'காப்புச் சிறைமிக்க கையறு கிளவியும்' என்பது, காப்புச் சிறைமிகவினுற் கையற்றுச் சொல்லுஞ்சொல். காப்புத்தான் இருவகைய, நிறைகாவல் சிறைகாவல் என; அவற்றுள், நிறை காவல் என்பது நிறையின் வேறுபாடு புறத்தார்க்குப் புலனுகா மைக் காப்பாட்டு ஆகாது முறையின் வேட்கைபெருகக் காண லுறவினுன் ஆற்றுளாய்ச் சொல்லும்; அதற்குச் செய்யுள்:

'மின்கண் படாவடி வேல்நெடு மாறன்விண் டார்முனைமேல்
மன்கண் படாத மயங்கிருள் நாள்வந்த நீர்த்துறைவற்கு
என்கண் படாத நிலைமைசொல் லாதிளஞ் சேவல்தழீஇத்
தன்கண் படாநின்ற அன்னத்த தேயால் தகவின்மையே.' (உகச)

'புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்பம் உழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தால்நீ எய்தும் கனவினுள்
வன்கண்ணுர் கானல் வரக்கண் டறிதியோ.' (சிலப். கானல்-௩௩)

எனக் கொள்க.

சிறைகாவல் என்பது, தாய்துஞ்சாமை, நாய்துஞ்சாமை, ஊர்துஞ்சாமை, காவலர்கடுகுதல், நிலவுவெளிப்படுதல், கூகை குழறல், கோழிகுரற்காட்டல் என இவை. அவற்றுள்,

தாய் துஞ்சாமைக்குச் செய்யுள் :

'ஆயுந் தமிழ்மன்னன் செங்கோல் அரிகேசரிமுனைபோல்
தேயும் வினைவொடு துஞ்சாள் மடந்தையிச் சேயிழையாள்
தாயும் துயில்மறந் தாள்இன்ன நாள்தனித் தாள்நெடுந்தேர்க்
காயும் கதிரோன் மலைபோய் மறைந்த கனையிருளே.' (உகடு)

இனி, நாய் துஞ்சாமைக்குச் செய்யுள் :

'வாருந்து பைங்கழற் செங்கோல் வரோதயன் வஞ்சியன்னாள்
சேரும் திறமென்னை தேன்தண் சிலம்பனைத் திங்கள்கல்சேர்ந்து
ஊரும் துயின்றிடம் காவல ரோடன்னை உள்ளுறுத்தெல்
லாருந் துயிலினும் துஞ்சா ஞமலி அரையிருளே.' (உகசு)

இனி, ஊர் துஞ்சாமைக்குச் செய்யுள் :

'மாவும் களிறும் மணிநெடுந் தேரும்வல் லத்துப்புல்லாக்
கோவும் துமியவை வேல்கொண்ட கோன்அந்தண் கூடலன்ன
பூவும் புகையும் விரையும் கமழ்ந்துபொன் னுலகம்
மேவும் விழவொடு துஞ்சா திரவிவ் வியன்நகரே.'



(உகஎ)

இனிக், காவலர் கடுகுதற்குச் செய்யுள் :

'அடிக்கண் அதிரும் கழலரி கேசரி தெவ்வனுங்கக்
கொடிக்கண் இடியுரும் ஏந்திய தென்னவன் கூடலன்னாள்
வடிக்கண் இரண்டும் வளநகர் காக்கும்வை வேலிளைஞர்
துடிக்கண் இரண்டுங்கங் குல்தலை என்றும் துயின்றிலவே.' (உகஅ)

இனி, நிலவு வெளிப்படுதற்குச் செய்யுள் :

'சென்று செருமலைந் தார்கள்செந் நீமூழ்கச் செந்நிலத்தை

வென்று களங்கொண்ட
கோன்தமிழ் நாடன்ன மெல்லியலாய்
இன்றிவ் விரவின் இருள்சென்
றிடங்கொண்ட தெங்குக்கொல்லோ
நின்று விசும்பிற் பகல்போல் விரியும்
நிலாமதியே.' (உகக)

இனிச், சிறைகாவல்
எல்லாம் வந்த செய்யுள் :
'இரும்பிழி மகாஅரிவ்
அழுங்கல் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா
தாகும்

மல்லல் ஆவணம்
மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல்
அன்னை துஞ்சாள்
பிணிகொள் அருஞ்சிறை
அன்னை துஞ்சின்

துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவேல் இளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய் ஞமலி குரையாது மடியின்
பகலுரு வுறழ நிலவுகான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்

இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைகட் சேவல் வாளாது
மடியின்
மனைச்செறி கோழி
மாண்குரல் இயம்பும்

எல்லாம் மடிந்த காலத் தொருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே
அதனால், அரிபெய் புட்டில் ஆரப் பரிசிறந்து
ஆதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்

கல்முதிர் புறங்காட் டன்ன
புல்முட் டின்றால் தோழிநங் களவே.'

(அகம்-கஉஉ)

## ஆறு பார்த்துற்ற அச்சக்கிளவி

இனி, 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவியும்' என்பது: ஆறு என்பது வழி, பார்த்துறுதல் என்பது பரிவுறுதல், அச்சம்

என்பது குறிப்பின்றியே தோன்றும் நடுக்கம்; கிளவி என்பது சொல்; அஃதாமாறு, தலைமகன் இரவுக்குறிவந்து ஒழுகா நின்ற நிலைமைக்கண், எம்பெருமான் வரும்வழி இறப்பவும் இன்னாது, நீருடைத்து கல்லுடைத்து முள்ளுடைத்து ஏற்றுடைத்து இழிவுடைத்து எனக் கவறல்; இஃதாம் ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி யென்ப ஒரு திறத்தார்; அவரறியார், இஃது ஆறுபார்த்துற்ற கிளவியே. இனி, அச்சக்கிளவி யென்பது, கள்ளருடைத்து, புலியுடைத்து, எண்குடைத்து, வெண் கோட்டியானை யுடைத்து, உருமுடைத்து, பாந்தளுடைத்து எனக் கவலுங் கவற்சியாற் சொல்லுவது. அவற்றுள்,

ஆறு பார்த்துற்றதற்குச் செய்யுள் :

'உருள்தங்கு மாநெடுந் திண்தேர் உசிதன் உலகளிக்கும்
அருள்தங்கு செங்கோல் அடல்மன்னன் கொல்லி அருவரைவாய்
மருள்தங்கு வண்டறை சோலைப் பொதும்பின் வழங்கற்கின்னா
இருள்தங்கு நீள்நெறி எம்பொருட் டால்வர் தியங்கல்மினே.' (௨௨௦)

இது கேட்ட தலைமகன் வரைவானும்.

## இனி, அச்சக்கிளவிக்குச் செய்யுள் :

'பண்குடை சொல்லிவள் காரண மாப்பனி முத்திலங்கும்
வெண்குடை வேந்தன் விசாரிதன் மேற்கரை யேற்றெதிர்ந்தார்

புண்குடை வேல்மன்னன்
தென்னன் பொதியில் புனவரைவாய்
எண்குடை நீள்வரை நீயரை
எல்லி இயங்கல்மினே.'

(உஉக)

'அன்பெதிர்ந் தாலும்
வருதல்பொல் லாதைய ஆரமருள்

முன்பெதிர்ந் தார்படச் சேவைவென் றான்முகில் தோய்பொதியில்
பொன்பிதிர்ந் தாலன்ன மின்மினி சூழ்புற்றின் முற்றியசோற்
றின்பிதிர் வாங்கியெண் கேறு திளைத்துண்ணும் ஈண்டிருளே.' ()

இன்னும் அவற்றிற்குச் செய்யுள் :

'கையமை வேல்விளக் காகக் கனையிருள் நள்ளிரவின்
ஐயமை தோய்வெற்ப வாரல் நறையாற் றமர்கடந்திவ்
வையமெல் லாங்கொண்ட
மன்னவன் மாறன்மை
தோய்பொதியில்

தெய்வமெல் லாமரு விப்பிரி
யாத சிறுநெறியே.'
(உஉரு).

'தோள்வாய் மணிநிற மங்கைக்கு வாட்டமுந் துன்னுதற்கே
நாள்வாய் வருதிவிண் தோல்சிலம் பாநறை யாற்றுநண்ணூர்
வாள்வாய் உகச்செற்ற வானவன் மாறன்மை தோய்பொதியில்
கோள்வாய் இளஞ்சிங்கம் நீங்கா திரிதரும் குன்றகமே.' (உஉச)

'காந்தள் முகையன்ன
மென்விரல் ஏழைதன் காரணமாப்
பூந்தண் சிலம்ப இரவின்
வருதல்வொல் லாதுகொலாம்

வேந்தன் விசாரிதன்
விண்தோய் குடுமிப்
பொதியிலென் றும்
தேந்தண் சிலம்பின் அரிமா

திரிதரும் தீநெறியே.'
(௨௨௫)



## இறையனார்

### அகப்பொருள்

[களவு

'அழுது புலம்பியும் கையும்
இவள்பொருட் டாகஐய
தொழுதும் குறையுற்று
வேண்டுவல் வாரல்தன் னார்நிணமும்
பேய்
இழுதும் மிடைந்தசெவ் வேல்நெடு மாறன்எங் கோன்முனைபோல்
கழுதும் துணிந்து வழங்கல்செல் லாத கனையிருளே.' (௨௨௬)

'பொய்தலை வைத்த
அருளொடு பூங்குழ லாள்பொருட்டா

மைதலை வைத்தவன்
பூங்குன்ற நாட வரவொழிநீ

நெய்தலை வைத்தவை
வேல்நெடு மாறனெங்
கோன்முனைபோற்
கைதலை வைத்துக்
கழுதுகண் சோரும் கனையிருளே.'
(உஉஎ)

இவை தோழிக்கு உரியன.

இனித், தலைமகட்கு
உரியன வருமாறு:

'பணிகொண்டு வாழா

தெதிர்ந்து பறந்தலைக்

கோடிப்பட்டார்

துணிகொண்டுபேய்துள்ள வேல்கொண்ட கோன்சுடர்தோய்பொதி
அணிகொண்ட தாரண்ணல் வாரல் விடர்கின் றரவுமிழ்ந்த [யின்
மணிகொண்டு கானவர் வேழம் கடியும் மயங்கிருளே.' (உஉஅ)

புறம் பாடல்.

இவ்வகை சொல்லினவிடத்துத் தலைமகன் கேட்பானாயின் வரைவானும்; தோழி கேட்பின் வரைவு கடாவுவாளாம்; யாருங் கேட்பாரில்லையாயின் தானே சொல்லி ஆற்றுவாளாம். இஃது இரவுக்குறிக்கண்ணதே.

## இரவினும் பகலினும் நீவருகென்றல்

இனி, 'இரவினும் பகலினும் நீவருகென்றலும்' என்பது: பகற்குறியானும் இரவுக்குறியானும் வந்தொழுகாநின்ற தலைமகனை இரவும் பகலும் வாவென்று சொல்லுதல்; அதற்குச் செய்யுள் :

'உரவும்

கடல்சூழ் உலகுடை வேந்தன்

உசிதன் ஒன்னார்

பரவும் கழல்மன்னன்

கன்னியங் கானற் பகலிடம்நீ
வரவு மகிழ்ந்திலள்
என்தையல் வெய்யோன்
மலைமறைந்த
இரவும் வரவென்ன
ஊனம தாம்நின
தின்னருட்கே.' (உஉக)

இது கேட்டு, 'இவ்வகை யான் வந்தொழுகப் பொருந்து போலும் இவ்வகை சொல்வாளாயிற்று' என விரைந்து புகுவா ளும் என்பது.

இனி, ஒருசார் ஆசிரியர் இரவினும் பகலினும் நீ வருக என் றதனை இரவுவருவானைப் பகல்வருகென்றலும், பகல்வருவானை இரவு வருகென்றலும் என்றவாறு என்ப. அவற்றுக்குச் செய்யுள் வேறு காட்டுப. அவற்றுள் இரவு வருவானைப் பகல் வருகென்றதற்குச் செய்யுள் :

சூத்திரம்-௩0] இறையனார்

## பகல்வருகென்றல்

‘அடிமேல் அகலிடம் எல்லாம் வணக்கி அமரர்தங்கோன்
முடிமேல் வளைபுடைத் தோன்நெடு மாறன்முன் னுயர்த்த
கொடிமேல் உருமதிர் கூரிருள் வாரல்மின் நீர்மகிழும்
படிமேற் பகல்வம்மின் வந்தால் விரும்புமென் பல்வளையே.’ (உ௲௦)

என்பது கேட்டு, யான் இரவுவந்தொழுகப் பொருளாய்ப் பகல் வம்மின் என்கின்றது எனக்கருதி வரைந்து புகுவானும்.

இனிப், பகல்வருவானை இரவுவருகென்றற்குச் செய்யுள் :

## இரவுவருகென்றல்

‘அஞ்சா ததிர்மலைந் தாரமர் நாட்டுட னேமடிய
நஞ்சார் இலங்கிலை வேல்கொண்ட தென்னனன் னாடனைய
பஞ்சார் அகலல்குல் பாற்பகல் வந்தாற் பழிபெரிதாம்
மஞ்சார் சிலம்ப வரவென்ன ஊனம் மயங்கிருளே.’ (உ௲௧)

என, இதுசொல்லப் பகல் வருவேனை இரவு வருகென்றது இவ்வொழுக்கம் பொருண்மையினும் என வரைந்து புகுவானும்.

## கிழவோன்தன்னை

## வாரல் என்றல்

இனி, 'கிழவோன்தன்னை வாரல் என்றலும்' என்பது, தலைமகனை இரவின்கண்ணும் பகலின்கண்ணும் வாரல் என்று சொல்லுதல்; அதற்குச் செய்யுள் : ஓதம்: [illegible]

## இரவும் பகலும் வாரல் என்றல்

'ஓதம் கடைந்தம ரர்க்கமு
தாக்கி உணக்கொடுத்துப்
பூதம் பணிகொண்ட
பூழியன் மாறன் பொதியிலின்வாய்.
எதம் பழியினொ
டெய்துத லாலிர வும்பகலும்

இவ்வகையாற் பூப்பு உணர்ந்து வாயில்களோடுஞ் சென்று தலைமகளிடத்தானும் மூன்னாளுஞ் சொற்கேட்கும்வழி உறைவானாவது. உறைந்தபின்னை ஒன்பதுநாளும் கூடி உறைவானாவது.

மூன்னாளுஞ் சொற்கேட்கும்வழி உறைதற்குக் காரணம் என்னையெனின், தலைமகன் பரத்தையர்மாட்டானாக முன்னின்ற பொருமை [2]உண்டன்றே, அது மூன்னாளுஞ் சொற்கேட்கும்வழி உறையவே நீங்கும். நீங்கிய பின்னைக் கூட்டமாகவே கரு நின்றது மாட்சிப்படும். அது நோக்கி உணர்த்தப்பட்டது. அதனான் அறமெனப்பட்டது.

அல்லாதவிடின், தலைமகள்மாட்டு ஓர் பொருமை தோன்றும், பரத்தையர்மாட்டுநின்றும் வந்தான் என; அப்பொருமை ஒரு வெகுளியைத் தோற்றுவிக்கும்; தோற்றிய வெகுளி பெரியதோர் வெப்பத்தைச் செய்விக்கும்; வெப்பத்தினாற் கரு மாட்சிப்படாதாம்; படாதாகவே, அறத்தின் வழுவாம் என்பீது. அதனான், மூன்னாளுஞ் சொற்கேட்கும்வழி உறைவானும் என்பது.

பூப்பு புறப்பட்ட
மூன்னாளும் உள்ளிட்ட

பன்னிருநாளும் என்பது
துணிபுற்றுங்கு மூன்னாளும்

கூடி. உறையப் படுங்குற்றம்.

1. இளம்பிடியைச். 2. உண்டென்று எய்தும்.



என்னே எனின், பூப்புப் புறப்பட்டஞான்று நின்ற கரு வயிற்றிலே அழியும்; இரண்டாம் நாளின் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றும் நாள் நிற்குங் கருக் குறுவாழ்க்கைத்தாம், வாழினும் திருவின்றும்; அதனுற் கூடப்படாது என்ப.

'பூப்புமுதன் மூந்நாட் புணர வுணரின்
யாப்புறு மரபின் முனிவரும் அமரரும்
யாத்த காண மழியு மென்ப.'

எனப் பிறரும் ஓதினாராகலான் அமையாது என்பது. (ச0)

சூத்திரம் - சரு

கற்பினுட் பிரிந்தோன் பரத்தையின் மறுத்தந்து
அப்பொருட் படுப்பினும் வரைநிலை இன்றே.

என்பது என்னுதலிற்றே எனின், மேலைச் சூத்திரத்திற்கு உரியதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: கற்பினுட் பிரிந்தோன் என்பது — பரத்தையர் சேரியனுப் பூப்பு உணர்த்தப்பட்ட தலைமகன் என்றவாறு, பூப்பு நிகழ்ந்த முதன்மூன்று நாளும் வந்து சொற் கேட்கும்வழி உறைவானிலனுயின் தலைமகன் கற்பினுட் பிரிந்தோன் எனப்பட்டான்; கற்பு என்பது பூப்பு என்றவாறு; அப்பூப்புக் கற்புக்காலத்தன்றிக் களவுகாலத்து நிகழாமை நோக்கிப் பூப்பினையுங் கற்பு என்று சொல்லினர் என்பது; பரத்தையின் மறுத்தந்து என்பது - அம்மூன்று நாளுங் கழித்துப் பரத்தையர்சேரிநின்று நீங்கி வருவது என்றவாறு; அப்பொருட் படுப்பினும் என்பது — அறத்தாறுபடுப்பினும் என்றவாறு; அறத்தாறு படுத்தல் என்பது, தலைமகளை வாயில்களால் சிவப்பாற்றுவித்துப் புக்குத் தலைமகளோடு புணர்தல்; வரைநிலை இன்றே என்பது — குற்றமெனப்படாது அத்துணைச் சிறப்பின்றுயினும் என்றவாறு.

தலைமகளை வாயில்களாற் சிவப்பாற்றுவித்தற்குச் செய்யுள்:

தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல்

'பொன்னுர் புனலணி ஊரன்வர் துன்னிற் புறங்கடையான்

என்ஞு அளவிற் சிவந்தாள்

சிவந்தும் இயல்பதுவன்

றன்ஞு யெனச்சிவப்

பாற்றினள் வல்லத் தரசவித்த.

மின்ஞர்   அயில்மன்னன்
தென்புனல் நாடன்ன மெல்லியலே.'
()

என்பது.

(கக)

சூத்திரம் - சுரு

## புகழும் கொடுமையும் கிழவோன் மேன.

என்பது என்னுதலிற்றோ எனின், தலைமகற்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: புகழும் கொடுமையும் என்பது—புகழ் என்பது தக்கான் எனப்படுதல்; கொடுமை என்பது தகான் எனப்படுதல் என்றவாறு; கிழவோன் மேன என்பது — அவை இரண்டும் தலைமகன்கண்ண என்றவாறு.

எனவே, இத்தன்மைத்துத் தலைமகன் ஒழுகலாறு என்றவாறு. அஃதாமாறு தலைமகள்மாட்டு உறைந்தக்கால் தக்கான் எனப்படுதலும், பரத்தையர்மாட்டு உறைந்தக்கால் தகான் எனப்படுதலும் என்றவாறு.

யாராலோ அவை சொல்லப்படுவது எனின், வாயில்களான் எனக் கொள்க. அவர், 'புகழுடையன்' என்பதற்குச் செய்யுள்:

## தக்கான் என்றல்

'கோடிய நீள்புரு வத்து மடந்தை கொழும்பணைத்தோள்
வாடிய வாட்டம் உணர்ந்து மனையிடை வந்தமையால்
ஆடியல் யானை அரிகேசரிதெவ்வர் போலகன்று
நீடிய காதலர் தாமே பெரியர்இந் நீள்நிலத்தே.' (உஅக)

இனி, அவர், 'தகான்' என்றதற்குச் செய்யுள் :

# தகான் என்றல்

"'விண்டுறை தெவ்வர் விழிஞத் தவியவெள் வேல்வலங்கைக்
கொண்டுறை நீக்கிய கோன்வையை நாடன்ன கோல்வளையிவ்
வண்டுறை கோதை வருந்தால் லாரில்லுள் வைகுதலால்
தண்டுறை சூழ்வயல் ஊரன் பெரிதும் தகவிலனே.' (உகo)

என்பது. (கஉ)

சூத்திரம்-சஎ]

# சூத்திரம் - ௩௪

கொடுமை இல்லைக் கிழவி மேற்றே.[1]

என்பது என்னுதலிற்றோ எனின், தலைமகளது பெருமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : கொடுமை இல்லை என்பது — தக்காள் எனப்படுதலல்லது தகாள் எனப்படுதல் இல்லை என்றவாறு; கிழவி மேற்றே என்பது — தலைமகள்மாட்டு என்றவாறு.

தலைமகள் எக்காலத்தும் ஒருதன்மையள் என்றவாறு: தலைமகன் தன்மாட்டு வந்து உறைந்த காலத்தே தக்காளாய்ப் பரத்தையர்மாட்டுச் சென்று உறைந்த காலத்துத் தகாள் ஆங்கொல்லோ எனின், ஆகாள் என்றவாறு: அதற்குச் செய்யுள்:

'நிரந்தாங் கெதிர்ந்தார் அவியகெல் வேலித்தன் நீள்சிலையால்
சரந்தான் துரந்துவென் றான்தமிழ் நாடன்ன தாழ்குழலாள்
பரந்தார் வருபுனல் ஊரன்தன் பண்பின்மை எங்களையும்
[2]கரந்தாள் கடலிடம் எல்லாம் புகழ்தரும் கற்பினளே.' (உகக)

இது தலைமகன் பரத்தையர்சேரியனாகத் தலைமகள் பக்கற் புக்க பாணன் தலைமகளது நிலைமை கண்டு தன் விறலிக்குச் சொல்லியது. (கந)

## சூத்திரம் - ௩௪

கிழவோன் முன்னர்க் கிழத்தி தற்புகழ்தல்
புலவிக் காலத்தும் புரைவ தன்றே.

என்பது என்னுதலிற்றோ எனின், தலைமகள்திறத்து இன்னதோர் குணம் உண்டு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: கிழவோன் முன்னர்க் கிழத்தி தற்புகழ்தல் என்பது — தலைமகன்முன்னர்த் தலைமகள் தன்னைப் புகழ்தல் என்றவாறு; புலவிக் காலத்தும் புரைவது அன்றே என்பது — புலவிக்காலத்தன்றே அஃது உரியது, அந்தக் காலத்துந் தகாது என்றவாறு.

எனவே, தலைமகள் எவ்விடத்தும் தன்னைப் புகழப்பெறாள் என்பது. எனவே, தலைமகளது பெருமை பெற்றாம். இனிக், கிழவி தற்புகழ்தல் பெறாள் என, பரத்தை தற்புகழ்தல் பெறும்

(பாடம்) 1. மேன. 2. கரந்தா ளகலிட.

என்பது போந்தது.

செய்யுள் :

அவ்வாறு பரத்தை

நற்புகழ்நற்குச்

பரத்தை நற்புகழ்தல்

'வெஞ்சுடர் நோக்கு நெருஞ்சியில் ஊரனை வெண்முறுவற்
செஞ்சுடர் வாள்முகத் தாள்முன்னை யென்பால் திரியலனேல்
அஞ்சுடர் வேலரி கேசரி-கோளம ஞட்டுடைந்தார்
தஞ்சுடர் வாட்படை போல உடைகவென் சங்கங்களே.'

(உ௱உ) பிறவும் அன்ன

கண்டுகொள்க.

## சூத்திரம் - சுஅ

நாடும் ஊரும்
இல்லும் சுட்டித்

தன்வயின்
கிளப்பின்
புலவிப் பொருட்டே.

என்பது என்னுதலிற்றோ எனின், தலைமகள் தற்புகழ்ந்தாளாகற்க, இவ்வாறு சொல்லியக்கால் அதுவும் புலவிநிமித்தம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் போருள்: நாடும் ஊரும் இல்லும் சுட்டி என்பது—நாடே ஊரே இல்லை இவற்றைக் கருதி என்றவாறு, தன்வயிற் கிளப்பிற் புலவிப்பொருட்டே என்பது—தன்கட் சொல்லிற் புலவிப்பொருட்டாம் என்றவாறு.

தான் உறையும் நாட்டையும், தன் ஊரையும், தான் பிறந்த குடியையும் சொல்லித் தலைமகள் தற்புகழ்ந்தா ளாகற்க; இவ் வாறு சொல்லியக்கால், இது புலவிப்பொருட்டாம் என்றவாறு. அஃதாமாறு, 'எம்நாடு இறப்பவுஞ் சிறியாராலே வாழப்படுவது' எனவும்,

'குறும்புகழ் இருக்கை
மறந்தலை மணந்து
சிறுகூழ் வல்சியிற்
சில்வரை யிற்றே

அங்காட் டுள்ளும் எம்மூ ராமே
புல்வாய் வலக்கொல் லேசிதர் பற்றி
வளநனி குறைந்த வாரித் தன்றே.

(பள்ளம்)

அவ்வூருள்ளும் பிறந்த இல்லம்
கல்லாச் சிறியோர் [1]இல்லம் அன்றே.

'அன்ன சிறியவொழுக்கம் நுமக்குத் தக்கதன்றே! அல்லதூஉம், எம்பெருமாற்கெனின் இறப்பவும் பெருந்தன்மைய அன்றே! அந்நீரார்க்கு இவ்வாறு தலையளி பொறுக்குமன்றே' எனவும்

(பாடம்) 1. உள்ளம்.

வி. அல்வாய் அலைய் சொல்லை.

சூத்திரம்-சகூ]

சொல்லுதல். இவ்வாறு சொல்லினவிடத்துத் தலைமகன் மாட்டுப் புலவியே கொள்ளக் கருதிச் சொன்னாளாம் என்பது. அதற்குச் செய்யுள் :

தலைவி தற்புகழ்தல்

'வெறிதரு பூந்தார் விசாரிதன் வேலைமுந் நீர்வரைப்பின்
நெறிதரு கோல்செல்லும் எல்லையுள் ளேமல்ல நீர்மையில்லாச்
சிறியவர் வாழ்பதி யேயெமர் இல்லஞ் சிறிதெமக்கே
எறிபுனல் ஊரஎவ் வாறும் அமையும்நின் இன்னருளே.' (உகக)

சூத்திரம் - ௬௬

# அவன்வயின்
# கிளப்பின் வரைவின் பொருட்டே.

எனபது என்னுதலிற்றோ எனின், இவ்வாறு சொல்லின் வரைவின் பொருட்டாகும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: அவன்வயின் கிளப்பின் என்பது—நாடும் ஊரும் இல்லும் சுட்டித் தலைமகனைச் சார்த்திச் சொல்லின் என்றவாறு; வரைவின்பொருட்டே என்பது—வரைதல் என். பது, நீக்கிநிறுத்தற் பொருளவாம் என்றவாறு.

யாதினை நீக்கிநிறுத்தலோ எனின், புலவியை நீக்கி நிறுத்தல். அஃது என்னை பெறுமாறு எனின், மேற்சூத்திரத்திற், 'புலவி' என்று அதிகாரம் வாராநின்றதாகலான் என்பது.

பரத்தையை மறுத்தந்து வாயிலாற் புக்க தலைமகனை ஏற்று எதிர்கொண்டு வழிபட்டாள்; பின்னைக் காரணத்தின் நீங்கிய பொறுமைக்குக் காரணம் பெற்றுத் தோற்றிற்று. அது தோன்றத், தலைமகனை ஒன்றன் தலைக்கிடாகச் சொல்லுதல்; 'எம்பெருமான், நீர் பெரிதாகிய நாட்டிற் பெரிதும்மிக்க ஊரிற் பெரிதும் மிக்க குலத்திற் பிறந்த பேரொழுக்கத்தினீர்க்குத் தக்கதே சிறியேமாகிய எந்திறத்துத் தலையளி!' எனச் சொல்லுதல்; இவ்வாறு சொல்லுவாள் புலவி நீக்குவான் சொல்லிற்றாக என்பது; அவ்வாறு சொல்லியதற்குச் செய்யுள் :

# மிக்கீர்க்கிது

# தக்கதன்றென்றல்

'வரியவண் டார்தொங்கல் மான்தேர் வரோதயன் வல்லத்தொன்னார்
கரியவை வேல்கொண்ட காவலன் காக்கும் கடலிடம்போல்
பெரியநல் நாட்டிற் பெரியநல் லூரிற் பெரிய இல்லிற்கு
உரியமிக் கீர்க்கியல் பன்றுகொல் இவ்வா றொழுகுவதே.' (௩௧௪)

இச்சூத்திரத்தைப் பருந்துவீழ்க்காடாகக் கிடந்ததென்று, களவினுள் வரைவின்பொருட்டாக என்பாரும் உளர். அது பொருத்தமன்று, என்னை,

'வரைதல் வேட்கைப் பொருள' (இறையனர் - ௩௦)

என்ற சூத்திரத்துள், 'அன்ன மரபிற் பிறவுந் தொகைஇ' என்ற வழி அடங்கும். அல்லதூஉம், கற்பினுட் களவுகொணர்ந்து உரைத்தல் பொருந்தாது. (௧௬)

# சூத்திரம் - ருo

## உணர்ப்புவயின்
## வாரா ஊடல் தோன்றிற்
## புலத்தல் தானே
## கிழவற்கும் வரையார்.

என்பது என்னுதலிற்றோ எனின், தலைமகட்கே உரியதோர் இலக்கணம் ஒரிடத்துத் தலைமகற்கும் உரித்து என்பது உணர்த்

## துதல் நுதலிற்று.

இதன் பொருள்: உணர்ப்புவயின் வாரா ஊடல் தோன் றின் என்பது—உணர்த்துதற்கு இடம்வாரா ஊடல் தலைமகட்கு வெளிப்பட்டு நிற்பின் என்றவாறு; புலத்தல்தானே கிழவற்கும் வரையார் என்பது—புலந்து சொல்லுதற்றன்மை தலைமகற்கும் வரையார் என்றவாறு.

அது தலைமகட்கே உரித்தன்று. அவை இந்நேரத்துக்கண் தலைமகற்கும் உரிய என்றவாறு.

"தலைமகள்மாட்டு ஊடல் தோன்றுமிடத்து மூன்று வகையான் ஊடல் தோன்றும், செய்தான்கொல்லோ எனவும் செய்யா நின்றான்கொல்லோ எனவும் செய்வான்கொல்லோ எனவும்." அவற்றுள் செய்தான்கொல்லோ எனப் பிறத்தல் என்பது, பரத்தையைத் தேரேற்றினான், பூச்சூட்டினான், அவளோடு ஆடினான்கொல்லோ பிரிந்தான் கொல்லோ எனப் பிறப்பது. இச் . செய்தான் என்பது இறந்தகாலத்துத் துணிபு பற்றி நிகழ்வது. இனி, செய்வான்கொல்லோ என்பது எதிர்காலத்துச் செய்யுங்கொல்லோ என நிகழ்வது. அவற்றுள் இறந்தகாலத்தே தான் நிகழ்ந்தது உணர்த்துதற்கு இடனுடைத்தன்று; தெற்றென அறிந்தேனல்லாதேன் எம்பெருமானை வருத்துவேனோ எனவுந் தானேயும் மீண்டு நிலையுடைத்து, பிறர் சிறிது சொல்லவும் மீண்டும் நிலையுடைத்து, இனி, எதிர்காலத்தே நிகழ்வதும் மீண்டும் நிலையுடைத்து, தெற்றென அறிந்தேனல்லாதேன் ஒரு காலத்து நிகழ்வதெனக் கருதுதல் பொருந்தாது. என்னை,

யாறு வருகின்றதென்று ஆடை தலைச்சூடாரன்றே என்பது. இனி, இறந்தகாலத்துத் துணிவுபற்றி நிகழ்ந்த துண்டன்றே, அஃதெல்லாரும் உணரச் செய்தானாகலானும், அஃது உணர்த்து தற்கு இடம் அன்று, அதுசெய்திலேன் என்று சொல்லிவிடின் அது மறைவதன்றாகலான் என்பது. இனி மறுப்பானாயின், செய்தன் மேலுஞ் செம்பூச் சிதறினாற்போலக் கொடுமையுடைத் தாம். அதுதான் உணர்த்துதற்கு இடனன்றாயிற்று என்பது, அவ் வூடல் தோன்றுமெனின் என்றவாறு.

எனவே, எந்நேரத்துக்கண்ணே தோன்றுவது எனிற் சொல்லுதும்: பரத்தையர் சேரியினின்றும் வந்த தோழியை வாயிலாகக் கொண்டான்; கொள்ளத், தோழி புக்குப் பல காரணமுங் காட்டினாள்; காட்டுவாள், 'நாம் இல்லிருந்து [1]இறைவழிபட்டு, மக்களை வளர்த்து, விருந்து புறந்தருதலல்லது போகத்துள்ளாமன்றே, அல்லாதேம் ஊடலும் புலவியும் துனியும் கொள்ளற்பாலமல்லம்;

அல்லதூஉம், வண்டோரனையர் ஆடவர், பூவோரனையர் மகளிர் என்பது; என்னை, வண்டுகள் தாதூதுமிடத்து [2]நன் மலரே ஊதுவேம் அல்லாதது ஊதேம் என்னு, எல்லாமலரும் ஊதும்; இனிப், பூவாயினக்கால், 'எம்மையே ஊதா எல்லாப் பூவையும் ஊதின' என்று புலவாதன்றே; அதுபோலத் தலைமக னும் எல்லாப் பெண்பால்களையும் தலைப்பெய்தற்றன்மையான்; அத்தன்மை அறிவான் போம்பொழுது புறந்தொழுது வரும் பொழுது எதிர்தொழுது ஏற்றுக்கொண்டு வழிபடுதலல்லது மலைத்தற்கண்ணேமல்லம்; மலைத்து இப்பெற்றியமாதல் தலைமை யன்று;

அல்லதூஉம், 'இவ்வாறே வழிபடாதொழிவாமல்லாதாம் நம்பெருமானை வருத்தி என்செய்தும் என்று ஏற்றுக்கொண்டு வழிபடுவது 'பொருளேபோலக் காட்டும்' என்று இங்ஙனஞ் சொல்ல, 'அஃதொக்கும்பிற' என்று அப்போதைக்குச் சிவப்பு நீங்கிற்று; நீங்கப் 'புகுதக' என்றாள். என, அவன் புக்கான். புக்குப் பள்ளியிடத்தானாக, உள்ளுடைத்தாகிய சிவப்புத்தோன் றும் என்பது; தோன்றக் கண்சிவந்து நுதல் வேறுபட்டுக் காட்டினாள்; காட்டப் பெரிதும் ஆற்றானாயினான்; ஆற்றாத் தன்மையனேயாய் இறந்தகாலத்து நிகழ்ந்தனவற்றைப்பற்றிப் புலந்து சொல்லும். 'என்னை, மேலைக்காலத்து நாம் ஆற்றா மாகத் தான் ஆற்றாளாய் நாம் [1]ஆற்ற ஆற்றிவருகின்ற இவளே, இற்றைநான்கு நாம் ஆற்றாமாயது அறியாமையால், இவ்வாற்

1. இறைவழிப்பட்டு. 2. நாண்மலரே.

ருமை என்னையாற்றிலாமையால் இவள் நங்காதலியல்லள். அவள் போல்வதோர் தெய்வம்; நீ அவளெனக் கருதினாய் நெஞ்சே, நினது மடமையால்; நெஞ்சிற்குச் சொல்லும்; அவள் யாராகியாள் என நெஞ்சிற்குச் சொல்லியதற்குச் செய்யுள் :

தலைமகன் நெஞ்சிற்குரைத்தல்

'இல்லென் றிரவலர்க் கீதல்செய் யாதவன் இல்லமெனப்
புல்லென்று வாடிப் புலம்பல்நெஞ் சேமக் கியார்பொருந்தார்
வில்லொன்று சேர்பொறி வானவன் வாட விழிஞங்கொண்ட
கொல்லொன்று வாட்படை யான்தமிழ் நாடன்ன கோல்வளையே.

'அரையணங் குந்தகி லாளல்லள் ஆற்றுக் குடியில்வென்ற

உரையணங் குந்தமிழ்
வேந்தன் உசிதனொண்
பூம்பொதியில்
வரையணங் கோஅல்லை
யோஎன்ன யான்மம்மர்
எய்தஉண்கண் நிரையணங்
கும்பனி நீர்கொள்ள நின்றனை
நேரிழையே.' (உகூ)

என்பது, தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது. அது கேட்ட தலைமகள், 'மேனாள் யான் செய்த குற்றேவல் உட்கொள்வானாயிற்று, என்கட் பேரருளினானன்றே, இவ்வகைப் பேரருளினான்றிறத்து இவ்வகை சிவத்தல் தகாது' என்று சிவப்பு நீங்குவாளாவது. (கஎ)

## சூத்திரம் - ருக

நில்ம்பெயர்ந்

துறையும், நிலையியல்

மருங்கின்

களவுறை கிளவி

தோன்றுவ தாயின்

திணை நிலைப்

பெயர்க்கோள் கிழவற்கும்

வரையார்.

என்பது என்னுதலிற்றோ எனின், இன்னுங் கற்புக்காலத்துத் தலைமகற்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— நிலம் பெயர்ந்து உறையும் நிலையியல் மருங்கின் என்பது — நிலம்பெயர்ந்து உறையும் என்பது, உள்ளத்துக்கண் நிலைபெற்றவிடத்து என்றவாறு; களவுறை கிளவி தோன்றுவது ஆயின் என்பது—களவு காலத்திற்குரிய சொல் தலைமகள்மாட்டுத் தோன்றுமே எனின் என்றவாறு; திணைநிலைப் பெயர்க்கோள் கிழவற்கும் வரையார் என்பது — திணைநிலைப் பெயர்ந்துகொள்ளுங் கோள் தலைமகற்கும் வரையார் என்றவாறு.

## சூத்திரம்-ருக]

# இறையனார் அகப்பொருள்



அஃதாமாறு, தலைமகளை எய்திக் கற்புக்காலத்து ஒழுகா நின்ற நிலைமைக்கண் நெஞ்சு பொருட்குப் பிரிதும் என்றது என்பது.

'நட்டாரை யாக்குதலும் செற்றாரைச் சிதைத்தலும் பொருட்குறைபாடு உடையார்க்கு நிகழாவாகலாற் குறைபாடு நீங்கப் பொருட்குப் பிரிதும்' என்ற நெஞ்சிற்குத் தலைமகன், நாம் பொருட்குப் பிரிய இவள் ஆற்றுமேற் பிரிதும், ஆற்றாளாயின் ஒழிதும்' என்று நெஞ்சினோடும் ஒருப்பட்டுத் தலைமகளுழைப்புக்கான்; புக்குப் பள்ளியிடத்தானாகிப் பெரியதோர் அருளிச்செய்கை செய்தான்; செய்யத் தலைமகள், 'எம்பெருமான் பண்டும் அருளிச்செய்கை செய்தான்மன், இவை பண்டே போலாது, பெரிதும் [1]இழுமத்தக்கனபோலக் காட்டின, பிரியக் கருதினான் கவடுபோலும்' "மற்று நின்னிற்பிரியேன் பிரியின் ஆற்றேன்" என்று சொல்லும்சொல் பொய்ப்பட்டதாம்' என பொய் என்றும் ஒழுக்கம் குறைபாடாமது பிறவென என்று ஆற்றாளாயினாள். அவ்வாற்றாத்தன்மை தலைமகற்குப்புலனாயிற்றாகலான், 'இவள் குறிப்பினானே பிரிவுணர்ந்து ஆற்றாளாயினாள், பிரியின் இறந்துபடும்' என்று தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியதற்குச் செய்யுள்:

நெஞ்சிற்குரைத்தல்

'தளியும் துறந்தவெங் கானஞ் செலவின்று சொல்லுதமேல்
ஒளியுந் திருநுதல் வாடியுய் யாள்கொல் உசிதனென்ற
தெளியுஞ் சுடரொளி வாள்மன்னன் செங்கோல் எனச்சிறந்த
அளியும் பொறுதநெஞ் சேஙைய நின்றஇவ் வாயிழையே.' (உகள)

இவ்வண்ணம் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியதற்குச் செய்யுள்:

தலைமகன் செலவழுங்கல்

‘மையார் தடங்கண் வரும்பனி சோர வருந்திநின்றிந்
நெய்யார் குழலாள்இனைய நறையாற்று நின்றுவென்ற
கையார் கொடுஞ்சிலைச் செங்கோற் கலிமதன் காய்கலிக்கு
வெய்யான் பகையென நீங்குது மோநெஞ்சம் வெஞ்சுரமே.’ (உகஅ)

‘செருமால் கடற்படைச் சேரலர் கோன்நறை யாற்றழியப்
பெருமால் சிலைதொட்ட பூழியன் மாறன் பொருமுனைபோல்
அருமா நெறிபொருட் கோசெல்வ தன்றுநெஞ் சேயவள்தன்
பெருமா மழைக்கண்ணும் நித்திலம் தந்தன பேதுறவே.’ (உகக)

இவ்வாறும் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கும்.

---

1. இழித்தக்கன.



‘மருந்தெனின் மருந்தே
வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கின் அம்பகட்
டிளமுலைப்
பெருந்தோள் நுணுகிய
நுசுப்பின்

கல்கெழு கானவர் நல்குறு

மகளே.'

(குறுங்-எக)

இவ்வாறு நினைந்து பாலைநிலத்தானாயினான் செலவழுங்கி மருதநிலத்தானாயினான் எனக்கொள்க. அது, 'திணைநிலைப் பெயர்க்கோள்' கிழவற்கும் உண்டாயினவாறு. பிரிவினை வேண்டாதாள் தலைமகளாயினும் தலைமகனும் வேண்டாதானாகலின், இந்நேரத்துக்கண் என்றவாறு.

௨ 5) இன்னும், 'நிலம்பெயர்ந்து உறையும் நிலையியன் மருங்கின்' என்பது, உடன்கொண்டு போவேன் எனத் தலைமகன் உள்ளத்தின்கண் நிலைபெற்றவிடத்து என்றவாறு.

'களவுறை கிளவி' என்பது, களவுறைந்த உரியசொல், அறத்தொடுநிலை என்றவாறு.

காலத்திற்கு

'தோன்றுவதாயின்'

என்பது, தலைமகன்மேல்

தோழி

மாட்டுத் தோன்றுமே எனின்

என்றவாறு.

'திணைநிலைப் பெயர்க்கோள் கிழவற்கும் வரையார்' என்பது, பாலைநிலத்தானுயினன் தலைமகன் மருதநிலத்தானுயினன்

என்பது.

கிழவற்கும் வரையார்

என்ற உம்மையால்

கிழத்திக்கும்

வரையார் எனக்கொள்க. இவளும் உடன்போக்கு ஒட்டிப் பாலைநிலத்தாளாயினுள், இவன் ஒழிந்தமை சொல்ல மருதநிலத் தாளாயினள் எனக்கொள்க. மேல் உடன்போக்குச் சூத்திரத் துக்கண் உரைக்கும் பொருள் ஈதென்று கொள்க.

'பொருள்வயிற் பிரிபினும் புணர்ந்துடன் போகினும்

அதுபிரி வுரைப்பினும்

பாலை யாகும்.'

என்றாராகலின்.

(கஅ)

## சூத்திரம் - ௫உ

நிலப்பெயர்ந் துறையும்
எல்லாப் பிரிவும்
ஒழித்தோர் அறியவும்
அறியா மையும்

கழிந்துசேட்

படூஉம் இயற்கைய என்ப.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் கற்புக்காலத்துத் தலைமகன் பிரிவின்கண் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.



இதன் பொருள் : நிலம் பெயர்ந்து உறையும் எல்லாப் பிரிவும் என்பது—பரத்தையிற் பிரிவொழித்து எல்லாப் பிரிவும் என்றவாறு; ஒழிந்தோர் அறியவும் அறியாமையும் என்பது—தலைமகளும் தோழியும் அறியவும் அறியாமையும் என்றவாறு; கழிந்து சேட்படும் இயற்கைய என்ப என்பது—காடிடையிட்டும் நாடிடையிட்டும் அகன்று உறைதற்றன்மையர் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

எனவே,

'ஓதல் காவல் பகைதணி வினையே

வேந்தற் குற்றுழி பொருட்பிணிப் பிரிவு.' (இறையனார்-நடு)

என, இவற்றிற்குப் பிரிகின்றவன் தலைமகளையும் தோழியையும் அறியச்சொல்லிப் பிரிதலும் உடையன், அறியாமைப் பிரியவும்

உடையன், இரண்டும் இலக்கணம் என்பது.

அவற்றுள் அறியாமைப் பிரிதல் பொருத்தமின்று.

அறியப் பிரிவது, 'யான் இன்னதோரிடத்து இன்னதோர் கருமம் முடித்து வருவேன்' என அவளை உடன்படுத்துப் பிரி

அல்லது, அவன் சொல்லாது பிரிந்தவிடத்து, 'இவ்வகை சொல்லாது பிரிதற்குக் காரணம் என்னைகொல்லோ' எனவே கவல்பவாகலின், அஃது அறியாமைப் பிரிதல் என்பது.

சிலநாள் இடையுடைத்தாக ஒரதிகாரம்படுத்து, 'இங்ஙனம் பிரிந்து ஒரு கருமம் முடித்துக்கொண்டு வந்தார் தலைமக்கள், தலைமகளிரும் அவர் அது முடித்து வருந்துணையும் ஆற்றியிருந்துவந்தார், இஃது உலகினதுபண்பு' என்னும். என, 'ஒக்கும்பிற, தலைமக்கள் பிரிந்து பொருள்முடித்து நின்றக்கால் தலைமகளிர் ஆற்ருரபவே' எனின், 'அவரது ஆள்வினையை இடையூறுசெய்தாராவர்பிற, அதனல், அவர் பிரிந்து பொருண் முடித்து வருந்துணையும் ஆற்றுவதேயாகாதே செய்யப்படுவது' என்னும். என, 'ஆற்றுவேன்' என்ருள், இடையுடைத்தாலோ என்பதனன். என்னை, (சாதலும் கெடுதலும் எல்லாவுயிரும் அறியுமேயெனினும் செத்தாலோ என்பதனற் கலங்கார் மனன்:) அன்னது இவட்கும் ஆம் என்பது, இங்ஙனம் உணர்த்திவைத்தார் பிரியும் நாளது கதுமெனக் கலங்கி ஆற்ருளாகவும் போவது சாந்தன்மையான் என்பதனல் பெற்றதே இலேசாகப் பிரிவது கருமம் என்று முற்படாது பிரிதலும் உடையன் என்பது. "அந்நாள் ஆற்றுவேன் என்ருயன்றே, ஆற்ருளாவதற்

குக் காரணம் இல்லை மேற்பொய்யாத் தன்மையளாகலின்'' என்று முற்பட்டு ஆற்றுவித்துத் தோழியை ஓம்படை ஏவிப் பிரியவும் பெறும் என்பது, அறியப் பிரிவது வலியுடைத்து.

அறியாமைப் பிரிந்த தலைமகனையுடைய கிழத்தி சொல்லிய தற்குச் செய்யுள் :

'செல்லார் அவரென் றியானிகழ்ந் தேன்சுரஞ் செல்வதென்கண்
ஒல்லாள் அவளென் றவரிகழ்ந் தார்மற் றுவையிரண்டும்
கொல்லார் அயிற்படைக் கோன்நெடு மாறன் குளந்தைவென்ற
வில்லான் பகைபோல் எனதுள்ளந் தன்னை மெலிவிக்குமே.' (௩00)

அஃதேயெனின், நிலம்பெயர்ந்து உறையவும் பிரிவும் ஒழிந் தோர் அறியவும் அறியாமையும் என அமையாதே, 'எல்லாம்' என்றது எற்றிற்கோ எனின், களவுகாலத்தும் ஒரு பிரிவு சொல் லப்பட்டதன்றே, நிலம்பெயர்ந்து உறைவது பட்டபின்றை வரை யாக்கிழவன் நெட்டிடை கழிந்து பொருள்வயிற் பிரிவது என; அங்கும் அறியப் பிரியவும், அறியாமற் பிரியவும் அமையும் என் பதற்கும் சொல்லப்பட்டது என்பது.

'சேட்படும் இயற்கையது' என அமையாதே, 'கழிந்து' என்றது எற்றிற்கோ எனின், கழிந்தபின்றைக் கழிதலே யல்லது இடைச்சுரத்தே நின்றானும் அந்நிலத்தே நின்றானும் பெயர்தலில்லை என்பது; என்னை, சிற்றறிவினானன்றே, ஒரு கருமம் எடுத்துக்கொண்டு முடிப்பான் புக்கு, முடியாது தவிர்வார் என்பது.

'ஆடிய வெறியும்
அழுங்கிய செலவும்

நாடுங் காலை இல்லென மொழிப.'

என்றார் பிறர்.

இன்னும், அறியாமற்
பிரிதற்குச் செய்யுள்:

'செல்வார் அல்லரென் றியானிகழ்ந் தனனே
ஒல்வாள் அல்லளென் றவரிகழ்ந் தனரே
ஆயிடை, இருபே ராண்மை செய்த பூசல்
நல்லராக் கதுவி ஆங்கென்
அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே.'

(குறுந்-சங)

என்பதூஉங் கொள்க.

(கசு)

## சூத்திரம் - ருரு

எல்லா வாயிலும்
கிழவோன் பிரிவயின்
பல்லாற் றானும்

# வன்புறை குறித்தன்று.

என்பது என்னுதலிற்றோ எனின், பிரிவிடை ஆற்றாளாய தலைமகளை வாயில்கள் ஆற்றுவிக்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : எல்லா வாயிலும் என்பது—தலைமகனும் விருந்தும் ஒழிந்த எல்லா வாயில்களும்; (தோழியும் பார்ப்பானும் பாணனும் பாடினியும் என இவர்கள்) கிழவோன் பிரிவயின்-தலைமகன் நாடிடையிட்டும் காடிடையிட்டும் பிரியும் பிரிவின்கண்; பல் ஆற்றானும் வன்புறை குறித்தன்று—பலநெறியானும் ஆற்றுவித்தலைக் கருதின என்றவாறு.

என்பது, பருவம் குறிக்கப்பட்ட தலைமகள் பருவவரவின்கண், ஆற்றாளாய்க், 'கார்ப்பருவம் வரும்வழி அவர் பாணிப்பாரல்லர், வந்தார், வாராநின்றார், வருவர்' எனவும், 'இதனைப் பருவமன்றென்றும் பழித்து, அதனைப் பருவமே எனக் கருதினையேயெனில் அவராற் குறிக்கப்பட்ட பருவமன்று; என்னை, அவர் பொய்யுரை உரையார் ஆகலான்; யாம் தெளியேம்' எனவும், காலங் காட்டியும், சொகினஞ்[1] சொல்லியும், யாழ் பண்ணியும் எல்லாத்திறத்தானும் தலைமகளை ஆற்றுவிக்கும் என்பது. இனி தலைமகன்றன்னை, 'அன்பிலன் கொடியன்' எனவும் இத்தொடக்கத்தன எல்லாஞ் சொல்லியும் ஆற்றுவிக்கும்.

அவற்றுட் பருவ வரவின்கண் ஆற்றாளாய தலைமகளை ஆற்றுவித்தற்குப் படைத்து மொழிந்து பருவமன்று என்றதற்குச் செய்யுள் :

பருவமன்றென்றல்

‘கடாவும் நெடுந்தேர்க் கலிமத

னன்கலி தேயச்செங்கோல்

நடாவும் நகைமுத்த வெண்குடை வேந்தன்நண் ணார்மதில்பாய்ந்
திடாவும் மதமா மழைபெய்யும் ஓதை எனமுழவீகப்

பிடாவும் மலர்வன

கண்டே மெலிவதென் பெண்ணணங்கே.’

(நட௦க)

‘விட்கொன்று வைவேல்

விசாரிதன் மற்றிவ் வியலிடம்போய்

நடக்கின்ற செங்கோல் ஒருகுடை வேந்தன்நண் ணார்முனைபோல்
கடக்குன்றஞ் சென்றநம் காதலர் பொய்யலர் நையல்பொன்னே

மடக்கொன்றை வம்பினைக்
காரென எண்ணி மலர்ந்தனவே.'
(௩0௭)

1. சொகினம் - விருச்சி : நிமித்தம்.



194

இறையனார் அகப்பொருள்
[கற்பு

'பூரித்த மென்முலை யாயன்று பூலந்தைப் போர்மலைந்த
வேரித் தொடையல் விசய சரிதன்விண் தோய்கொல்லிமேல்
மூரிக் களிறு முனிந்துகை எற்ற முழங்குகொண்டல்
மாரிக்கு முல்லையின் வாய்நக வேநீ வருந்தலதே. (௩0௩)

'நீரற வறந்த நிரம்பா நீளிடைத்
துகில்விரித் தன்ன வெயிலவிர் உருப்பின்
அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுரம் இறந்தோர் (கடைதிறல்)
தாம்வரத் தெளித்த பருவங் காண்வர
இதுவோ என்றிசின் மடந்தை மதியின்று
மறந்துகடல் முகந்த கமஞ்சூல் மாமழை
பொறுத்தல் செல்லா திறுத்த வண்பெயல்
காரென் றயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவும் கொன்றையும் கோடலும்
மடவ ஆகலின் மலர்ந்தன பலவே.' (நற்றிணை - கூக)

இவை பிரிவிடைப் பருவங்கண்டு ஆற்றாளாய தலைமகளை 'இது பருவமன்று; என்னை, அவர் பொய்யுரையாராகலான்; இதுவும்வம்பு வம்பினைப் பருவம் என்று தம் மடமையாற் பிடவும் கோடலும் கொன்றையும் மயங்கிப் பூத்தன' என்று வற்புறுத்தாள்.

வருவரென வற்புறுத்தியது

'மையார் தடங்கண் மடந்தை வருந்தற்க வாள்முனைமேல்
நெய்யார் அயிலவர் காணப் பொழிந்த நெடுங்களத்து
வெய்யார் அமரிடை வீழச்செந் நூலிவெள் ளம்புகைத்த
கையார் சிலைமன்னன் கன்னிநல் நீர்கொண்ட கார்முகிலே.' (கூ0ச)

இது பிரிவிடையாற்றாளாகிய தலைமகளைத் தோழி, 'அவர் குறித்த பருவம் வந்ததாகலின் அவரும் பொய்யார், வருவர்' என்று வற்புறுத்தியது.

'கொடியார் நெடுமதிற் கோட்டாற் றரசர் குழாஞ்சிதைத்த
வடியார் அயிற்படை வானவன் மாறன்வண் கூடலன்ன
துடியார் இடையாய் வருந்தல் பிரிந்த துளங்கொளியார்
அடியார் கழலவர் அணுகவந் தார்த்த தகல்விசும்பே.' (கூ0ரு)

இதுவும் அது.

'பூமான் அனையமெல் நோக்கி அழுங்கல் அகன்றுசென்ற
தேமா நறுங்கண்ணி யாரையுங் காட்டுந்தென் பாழிவென்ற
வாமா நெடுந்தேர் மணிவண்ணன் மாறன்வண் டீந்தமிழ்நர்
கோமான் கொடிமேல் இடியுரும் ஆர்க்கின்ற கார்ம்புயலே.' (௫0௬)

இதுவும் அது.



*'கருந்தண் புயல்வண்கைத் தென்னவன் கைம்முத் தணிந்திலங்கும்
இருந்தண் குடைநெடு மாறன் இகல்முனை போல்நினைந்து
வருந்தல் மடந்தை வருவர்நம் காதலர் வான்அதிரக்
குருந்தம்.பொருந்திவெண் முல்லைகள் ஈன்றன கூரெயிறே.' (௫0௭)

இதுவும் அது.

*'புலமுற்றுந் தண்புயல் நோக்கிப்பொன் போலப் பசந்ததின்பால்
நலமுற்றும் வந்த நலமுங்கண் டாய்நறை யாற்றெதிர்ந்தார்
குலமுற்றும் வாடவை வேல்கொண்ட மாறன் குரைகடல்சூழ்
நிலமுற்றுஞ் செங்கோ லவன்தமிழ் நாடன்ன நேரிழையே.' (கூ0அ)

இதுவும் அது.

'அறையார் கழன்மன்னன் ஆற்றுக் குடியழல் ஏறவென்று
கறையார் சுடர்வேல் வலங்கொண்ட கோன்கடல் ஞாலமன்னாய்
நிறையாம் வகைவைத்து நீத்தவர் தேரொடு நீமறந்த
இறையார் வரிவளை சோரவந் தார்த்தன ஏர்முகிலே.' (கூ0கூ)

இதுவும் அது.

அஃதே யெனின், 'எல்லாவாயிலுங் கிழவோன் பிரிவயின் வன்புறை குறித்த' என்றது, 'பல்லாற்றானும்' என மிகை படக் கூறியவதனான் கற்புக்காலத்துக் கடிமனை சென்ற செவிலி, தலைமகனது நிலைமையும் தலைமகளது நிலைமையும் பார்த்து வந்து நற்றாய்க்குச் சொல்லியனவும் கொள்க; அதற்குச் செய்யுள் :

செவிலி நற்றாய்க்குரைத்தல்

'திருநெடுங் கோதையும்

தெய்வம் தொழாள் தெவ்வர்

மேற்செலினும்

பெருநெடுந் தோளண்ணல்
பேர்ந்தன் றித் தங்கான்
பிறழ்வில்செங்
அருநெடுந் தானை அரிகே
சரிஅந்தண் கூடலன்ன
[கோவ்
கருநெடுங் கண்மட வாயன்ன
தாலவர் கூறு தன்மையே.'
(௩௧0)

' பார்மன்னன் செங்கோற்
பராங்குசன் கொல்லிப்
பனிவரைவாய்க்
கார்மன்னு கோதையன்
னாளும் அருந்ததிக் கற்புடையாள்

தேர்மன்னன் ஏவச்சென்
ருலும் முனைமிசைச் சேர்ந்தறியா

போர்மன்னு வேலண்ணல் பொன்னெடுந் தேர்பூண் புரவிகளே.' (௩௧௩)

*'கூரார் அயில்கொண்டு நேரார் வளம்பல கொண்டவென்றித்
தேரான் வரோதயன்
வஞ்சியன்னுள் தெய்வஞ்
சேர்ந்தறியாள்
வாரார் கழல்மன்னன்
தானே பணிப்பினும்
வல்லத்துத்தன்.
நேரார் முனையென்றும்
தங்கி அறியான் நெடுந்தகையே.'
(௩௧௨)

பிறவுங் கொள்க.

* இக்குறிபெற்ற பாட்டுக்கள் மிகையாகக் காணப்படுவன.



'கானங் கோழி கவர்குரற் சேவல்

ஒண்பொறி எருத்தின் தண்சிதர் உறைப்பப்
புதல்நீர் வாரும் பூநாறு புறவிற்

சீறூ ரோளே மடந்தை வேறூர் வேந்துவிடு

தொழிலொடு செலினும்

சேர்ந்துவரல் அறியாது

செம்மல் தேரே.' (குறுந்-உ௬உ)

மற்றுங் கற்புக்காலத்துக் கிளவிகள் இது நிலமாகக் கொள்ளப்படுவனவெல்லாம் அறிந்துகொள்க. (உ௦)

## சூத்திரம் - ருசு

வன்புறை குறித்த

வாயில் எல்லாம்

அன்புதலைப்

# பிரிந்த கிளவி தோன்றிற் சிறைப்புறங் குறித்தன் றென்மனார் புலவர்.

என்பது என்னுதலிற்றோ எனின், மேற் சூத்திரத்து ஆற்று வித்துக்கொண்டிருக்குமாறு உணர்த்திப் போந்தார், இனித், தலைமகன் பிரிவெடுத்துக்கொண்டு பிரியுமிடத்து வாயில்களுக்கு உணர்த்த, வாயில்கள் தலைமகட்குப் பிரிவுணர்த்தத் தலைமகளது வாயில்க ளாமிடத்துச் சிறைப்புறத்தானாக அவன் கேட்கும் அணிமைக்கண் உணர்த்துக என்பது உணர்த்துதல் நுதலிற்று; என்பாரும்,

இனித், தலைமகனது பிரிவின்கண் தலைமகள் ஆற்றாளாயின விடத்துச் சிறைப்புறங் கூறியும் ஆற்றுவிக்க என்பது உணர்த் துதல் நுதலிற்று என்பாரும் உளர்.

இதன் பொருள்: வன்புறை குறித்த வாயிலெல்லாம் என் பது—தலைமகளை ஆற்றுவிக்கும் வகையால் ஆற்றுவித்தற்குரிய வாயிலெல்லாம், என்றவாறு; அன்பு தலைப்பிரிந்த கிளவி தோன்றின் என்பது — தலைமகன் பிரிவின்கண் தலைமகள் ஆற்றாளாயினவிடத்து, என்றவாறு; என்பது அவ்விடத்து வாயில்கள் ஆற்றுவிக்கற்பால, ஆற்றுவிக்கவில்லாதவிடத்து; சிறைப்புறம் குறித்தன்று என்மனார் புலவர் என்பது—சிறைப் புறத்துக்கண்ணுறுத்து ஆற்றுவிக்க எனச் சொல்லுவர் கற்று வல்லோர் என்றவாறு.

'சிறைப்புறங் குறித்தன்று' என்பது, கற்பெனப்பட்ட சிறைமேல்வைத்து ஆற்றுவித்தல் என்பது. அஃதாமாறு, மேற் சொல்லின முறையானெல்லாம் ஆற்றுவிப்பவும் ஆற்றாளாய்நின்ற தலைமகளை இவ்வாற்றானே ஆற்றுவித்துக் காண்பன் எனக் கருதி,

'நம்பெருமாட்டி பிறந்த குலம் மேனுள்தொட்டும் ஒழுக்கச் சிதைவின்றி விழுப்பமுடைத்தாய் ஓங்கி வாராநின்றதொரு பெருங்குலமன்றே, அக்குலத்தை நீ அழித்தல் தக்கதோ! நாணும் கற்பும் அன்றே பெண்டிர்க்கு அணிகலமாவன என்பதனால், இக்குலத்தினவர் கற்பெனப்பட்ட சிறை அழியாமை காத்துக்கொண்டொழுகினர், அதனை நீ அழிக்கின்றாயாகலின் நின்கட் பெரியதோர் பழியாக்குகின்றாய்' என்றும், 'நம்பெருமானும் தமது ஆண்மைத்தன்மை காட்டிப் பிரிந்தார், நீயும் அவர் கருதியது முடித்துவருந் துணையும் கற்புக்காத்திருக்க வேண்டும்' என்றும், 'சான்றோர்மகளிர் என்பார் சிறியரன்றிப் பெரியராகல்வேண்டும்; அத்தன்மை யென்பது தங்குலநோக்கித் தம் கற்புக்காத்து ஒழுகின், அதனின் மிக்கதில்லை' என்றும் இவ்வகை ஆற்றுவித்தல், 'சிறைப்புறங் குறித்தல்' என்பது; அதற்குச் செய்யுள் :

## சிறைப்புறங் குறித்தல்

'உலத்திற் பொலிந்ததிண் தோள்மன்ன னெண்தே ருசிதன்மற்றிந்
நிலத்திற் பொலிந்தசெங் கோலவ னீள்புனற் கூடலன்ன
கலத்திற்கு நாணிற்குங் கற்பிற்கு [1]ஞானத்தி னல்லநங்கள்
குலத்திற்குந் தக்கதன் றாலின்னை யாகுதல் கோல்வளையே.' (௩௧௩)

இவ்வகை சொல்லி ஆற்றுவித்தலே, 'சிறைப்புறங் குறித்தல்' என்றவாறு. (௨௧)

# சூத்திரம் - ருரு

# சிறைப்புறம் குறியா தோன்றலும் உளவே அவற்புணர் வறியும் குறிப்பின் ஆன.

என்பது என்னுதலிற்ரோ எனின், தலைமகன் பிரிந்தவழித் தலைமகள் ஆற்ருளாயினவிடத்துத் தலைமகனது வரவுசொல்லி ஆற்றுவிக்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: சிறைப்புறம் குறியா தோன்றலும் உளவே என்பது — மேல் தோழி கற்பெனப்பட்ட¹ சிறையை அழிக்கின்ருயென்றன்றே ஆற்றுவித்தது, அவ்வாறன்றி வருவனவும் உள என்றவாறு; அவன் புணர்வு அறியும் குறிப்பின் ஆன என்பது—தலைமகன் வினைமுற்றியானும் பொருண்முற்றியானும் வருங் குறிப்பின்கண் என்றவாறு.

---

1. ஞாலத்தி.

அஃதாமாறு, மேல் அவ்வகையாற் பிரிவெடுத்துக்கொண்டு ஆற்றுவித்தார், ஆற்றல் கண்டு பிரிந்தவழித் தோழி தலைமகளை ஆற்றுவித்துக்கொண்டு இருந்தாளன்றே; இருந்தவிடத்துத் தலைமகனும் தான் எடுத்துக்கொண்ட வினை முடித்தானன்றே; முடித்தவழியாற் குறித்தகாலம் வந்தது என்று, மறுத்துஞ் சார்ந்தானன்றே; சார்ந்த இடத்துச் [1]சங்கம் படகம் வந்து இசைத்தன. இசைப்பத், தோழி தலைமகனது வரவுணர்ந்து, 'எம்பெருமாட்டி, நீ இறந்துபடுவான் புக்காயால், கண்டா யன்றே, உள்ளாரால் எய்தப்படாத பொருளில்லை, நீ ஆற்றி யுள்ளாயாகின்றே இன்றும் எம்பெருமானை வழிபடுவாயாயினை யாயிற்று' என இவ்வாறு சொல்லுதல், 'சிறைப்புறங் குறியா தோன்றலு முளவே' என்பது.

[2]சங்க படகம் இசைப்பச் சங்கினை வாழ்த்திச் சொல்லிய தற்குச் செய்யுள் :

'தேனிற வார்கண்ணிச் செம்பியன் மாறன் செழுங்குமரி
வானிற வெண்திரை மால்கடல் தோன்றினை மண்ணளந்த
நீனிற வண்ணனும் ஏந்தினன் தம்முன் நிறம்புரைநீம்
பானிற வெண்சங்கம் யார்கின்னின் மிக்க படிமையரே.' (௧௧௪)

'புரிவளை வான்கோடு புத்தேளோ டொத்தி
திருவமர் மார்பனு மேந்தினன் தம்முன்
உருவம் புரையும்நின் கேழ்.' (௧௨)

என்பதூஉங் கொள்க.

## சூத்திரம் - ௫௩௪

திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் எச்சம் மெய்ப்பாடு
பயனே கேளென் றுங்கப் பத்தே
அகனைந் திணையும் உரைத்தல் ஆறே.

என்பது என்னுதலிற்றோ எனின், மேற் களவும் கற்பும் உணர்த்தினர், இனி அவ்விரண்டும்பற்றி வருகின்ற பாட்டினை இக்கூறப்பட்ட பத்திலக்கணத்தானும் உரைக்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

---

1. சங்கு படகம். 2. சங்கம் படகம்.

இதன் பொருள்: திணை யென்பது பல்பொருள் [1] ஒரு சொல்லாய்க் கிடந்தது: நிலத்திணையும் திணை யென்ப, குலத் திணையும் திணை யென்ப, ஒழுக்கத்திணையும் திணை யென்ப; ஆகவே, ஆகுபெயரால், அவரால் ஒழுகலாறு நிகழ்ந்த இடத் தையும் திணை என்றார்; அவை, குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என ஐந்துவகைப்படும்.

அவை அறியுமிடத்து, முதல் கரு உரிப்பொருள்பற்றி அறியப்படும் என்றவாறு. அவ்விலக்கணமெல்லாம் மேல்,

'அன்பி னைந்திணை'

(இறையனார் - க)

என்றதன்வழியே உணர்த்திப் போந்தாம். அவை திணை யெனப்படுவன.

அகப்பாட்டின் ஒரு பாட்டுக் கேட்டவிடத்து இவ்வைந் திணையுள்ளும் இன்னதொன்றுபற்றி வந்ததென்று சொல்லுவது.

இனிக் கைகோள் என்பது, களவு கற்பு என்றவாறு; இது களவுபற்றி வந்தது, இது கற்புப்பற்றி வந்தது என அறிவது.

இனிக், கூற்று என்பது, கூறுதற்கு உரியாரை அறிந்து, அவருள் இன்னர் கூறினர் இப்பாட்டு என்பது அறிவது; அக்கூறுதற்கு உரியாரைச் செம்பூட்சேயார் கூற்றியலுள்ளும், தொல்காப்பியனார் பொருட்பாலுள்ளும் கண்டுகொள்க.

'பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியோடு
அளவியல் மரபின் அறுவகை யோரும்
களவினிற் கிளவிக் குரியர் என்ப.' (செய்யுளியல், கஅக)

'பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்.' (செய்யுளியல், கஅ௨)

என்று ஓதினர் தொல்காப்பியனார் எனக் கொள்க.

இச்சொல்லப்பட்டாருள் இன்னர் கூற்று என்றறிவது.

இனிக், கேட்போர் என்பது, இன்னர் கூற இன்னர் கேட்டார் என்றறிவது; தோழி கூறத் தலைமகள் கேட்டாள், தலைமகள் கூறத் தோழி கேட்டாள், தோழி கூறத் தலைமகன்

1. ஒரு சொல் ஒன்றாய்க்.

அகப்பொருள்

[கற்பு

கேட்டான், தலைமகன் கூறத் தோழி
வகை அறிந்து உரைப்பது.

கேட்டாள் என்று இவ்

இடம் என்பது, அவ்வாறு ஒருவர் கூற ஒருவர் கேட்கு மிடம் என்றறிவது; அவை, தன்மை முன்னிலை படர்க்கை என்பன. அவற்றுள், யான் என்பது தன்மை, நீ யென்பது

முன்னிலை, அவன் என்பது படர்க்கை.
பற்றி வந்ததென்று அறிவது.

அவற்றுள் இன்னது

காலம் என்பது, இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என மூன்றுவகைப்படும்; அவற்றுள், உண்டான் என்பது இறந்தகாலம், உண்ணாநின்றான் என்பது நிகழ்காலம், உண்பான் என்பது எதிர்காலம். இவற்றுள் இன்னதுபற்றி வந்ததென்று அறிவது.

எச்சம் என்பது ஒழிவு, அஃது இரண்டு வகைப்படும். சொல்லெச்சமும் குறிப்பெச்சமும் என. அவையாமாறு முன்னர்ச் சொல்லுதும்.

மேய்ப்பாடு என்பது எட்டுவகைப்படும்; அவை—நகை, அழுகை, இளிவரல், மருட்கை, உவகை, அச்சம், பெருமிதம், வெகுளி என இவை; அவற்றுள் இன்னதோர் மெய்ப்பாடு வந்ததென்று அறிவது.

பயன் என்பது, இது சொல்ல இன்னது பயக்கும் என்று அறிவது.

கோள் என்பது, ஒரு பாட்டினகத்துப் பொருள்கொண்டு நிற்கும் நிலை; அஃது ஐந்துவகைப்படும்—விற்பூட்டு, விதலை யாப்பு, பாசிநீக்கு, கொண்டுகூட்டு, ஒருசிறைநிலை என்றவற்றுள் இன்னதோர் பொருள்கொண்டு நின்றது இப்பாட்டு என்று அறிவது. அவற்றுள்,

விற்பூட்டுப் பொருள்கோள் வருமாறு:

'வருவர் வயங்கிழாய் வாட்டாற் றெதிர்நின்று வாள்மலைந்த
உருவ மணிநெடுந் தேர்மன்னன் வீய ஒளிதருமேல்
புருவ முரிவித்த தென்னவன் பொன்னங் கழலிறைஞ்சாச்
செருவெம் படைமன்னர் போலவெங் கானகஞ் சென்றவரே.' ()

இனி, விதலையாப்பு வருமாறு:

'பண்தான் அனையசொல் லாய்பரி விட்டுப் பறந்தலைவாய்
விண்டார் படச்செற்ற கோன்கொல்லிப் பாங்கர் விரைமணந்த
வண்டார் கொடிநின் நுடங்கிடை போல வணங்குவன
தண்டாற் கடக்கிற்ப ரோகட வாரன்பர் கானகமே.' (௩௧௬)

பாசிநீக்கம் வருமாறு :

'சென்றார் வருவது நன்கறிந் தேன்செருச் செந்நிலத்தை
வென்றான் பகைபோல் மெலியல் மடந்தையும் வெற்பெடுத்து
நின்றான் அளந்த நிலமும் குளிர்ந்தது நீள்புயலால்
பொன்தான் மலர்ந்து பொலங்கொன்றை தாமும் பொலிந்தனவே.'

கொண்டுகூட்டுப் பொருள்கோள் வருமாறு :

'கோவைக் குளிர்முத்த வெண்குடைக் கோன்நெடு மாறன்முந்நீர்
தூவைச் சுடர்வே லவர்சென்ற நாட்டுள்ளும் துன்னுங்கொல்லோ
பூவைப் புதுமலர் வண்ணன் திரைபொரு நீர்க்குமரிப்
பாவைக் கிணையனை யாய்கொண்டு பண்டித்த பன்முகிலே.' (௩௧௮)

ஒருசிறைநிலை வருமாறு :

'கோடல் மலர்ந்து குருகிலை தோன்றின கொன்றைசெம்பொன்
பாடல் மணிவண்டு பாண்செயப் பாரித்த பாழிவென்ற
ஆடல் நெடுங்கொடித் தேரரி கேசரி அந்தண்பொன்னி
நாடன் பகைபோல் மெலிகின்ற தென்செய்ய நன்னுதலே.' (௩௧௧)

விற்பூட்டு என்பது, தலையும் கடையும் பொருள்கொள்வது ;

கொண்டுகூட்டிப்

ஒருசிறைநிலையென்பது, ஒரு பட்ட பொருள் ஒருவழி நிற்பது.

பாட்டினகத்துச் சொல்லப்

ஆங்கப்பத்தே என்பது—ஆங்கு என்பது அசைச்சொல்; பத்து என்பது தொகை; ஏ என்பது ஈற்றசை ஏகாரம்;

—

அகனைந்திணையும் உரைத்தலாறே என்பது — அகனைந் திணையும் அறிந்து உரைக்க அகப்பாட்டின் வல்லோர் சொல்லு மிடத்து என்றவாறு.

'முளிதரு வேனற்கண் கானவர் ஆர்ப்ப முகிற்கணங்கள்
தளிதரு தண்சிலம் பாதக்க தன்று தரணிதன்மேல்
அளிதரு செங்கோல்அரிகே சரிஅந்தண் கூடலன்ன
ஒளிதரு வாள்நுத லாள்ளைய இவ்வா றொழுகுவதே.' (கூ௨௰)

இப்பாட்டிற்குத்

திணை : குறிஞ்சி;
கைகோள் - களவு;
கூற்று - தோழிகூற்று;
கேட்டான் - தலைமகன்;

இடம் - முன்னிலை ;

காலம் - எதிர்காலம், வந்து

ஒழுகாநின்றானுக்கு உரைத்த

மையான் நிகழ்காலமாகவும்

கொள்க ;

எச்சம் - நீ யென்பது

எஞ்சிற்று ;

மெய்ப்பாடு - அச்சம்,

இவ்வொழுக்கம் பிறரறியின்

இறந்து

படும் என்னும்

நிலையினளாயினமையின் ;

பயன் - வரைவுகடாதல்;

பொருள்கோள் - தளிதரு தண்சிலம்பா தக்கதன்று இவள் நைய இவ்வாறு ஒழுகுவது எனக் கொண்டமையின், விதலை யாப்பு.

'மானக் கடுஞ்சிலை மான்தேர் வரோதயன் வாள்முனைபோன்
றூனப் படகினைந் தாடல்பொன் னேயுறு வெஞ்சுரத்து
நானக் குழல்மிசை நான்கொய்து கொண்டு நயந்தணிந்த
கானக் குரவினம் போதே கமழுமென் கைத்தலமே.' (கூஉக)

இப்பாட்டுத்

# திணை - மருதம்;

# கைகோள் - கற்பு;

கூற்று - தலைமகன் கூற்று, தலைமகன் பரத்தையைக் கோலச்சிறப்புச் செய்தானென்று வேறுபடலுற்ற தலைமகள் குறிப்பறிந்து தலைமகன் சொல்லியது;

கேட்டாள் - தலைமகள்;

இடம் - முன்னிலை ;

காலம் - இறந்த காலம் பற்றிவந்த நிகழ்காலம் ;

எச்சம் - என்னோடு என்பது எஞ்சிற்று ;

மெய்ப்பாடு - நடுக்கம் ;

பயன் - கேட்டுத் தலைமகள் ஊடல் தீர்வாளாவது ;

பொருள்கோள் - விதலையாப்பு, 'யான் கொய்து அணிந்த குரவினம் போதே இன்னும் கமழும் என் கைத்தலம்' என்று மொழிமாற்றுப் பொருள்கொண்டமையான் என்பது. (உரு)

சூத்திரம்-ருஅ]

இறையனார் அகப்பொருள்

# சூத்திரம் -

## ௫எ

## அவற்றுள்

## எச்சமும் கோளும் இன்மையும் உரிய.

எனபது என்னுதலிற்றோ எனின், மேற்கூறப்பட்ட பத்தினுள் ளும் எச்சமும் கோளும் இன்றியும் உரிய என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : அவற்றுள் என்பது — மேற் கூறப்பட்ட பத்தினுள்ளும் என்றவாறு ; எச்சமும் கோளும் இன்மையும் உரிய என்பது — எச்சமானும் கோளானும் அவ்விரண்டி னுள்ளும் ஒன்றொழிந்தும் இரண்டும் ஒழிந்தும் நிற்கவும் பெறும் என்றவாறு.

அவற்றுள், எச்சமின்றி வந்ததற்குச் செய்யுள் :

'ஆமான் அனையமென் னோக்கி அழுங்க லகன்றுசென்ற
தேமா நறுங்கண்ணி யாரையுங் காட்டுன்தென் பாழிவென்ற
வாமா நெடுந்தேர் மணிவண்ணன் மாறன்வண் தீந்தமிழ்நர்
கோமான் கொடிமே விடியுரு மார்க்கின்ற கூர்ம்புயலே.' (௩௨௨)

இனிக், கோளின்றி வந்தது வருமாறு :

வாடு நிலைமையை நீக்கிமண் காத்துவல் லத்தெதிர்ந்தார்
ஓடு நிலைமைகண் டான்வையை யொண்ணுதன் மங்கையரோ
டாடு நிலைமையை அல்லை அவரொடம் பூம்பொழில்வாய்
நீடு நிலையையும் அல்லைசொல் லாயென் னெடுந்தகையே.' (௩௨௩)

எனக் கொள்க.

(௨௫)

சூத்திரம் - ௩௮

# சொல்லே குறிப்பே

# ஆயிரண் டெச்சம்.

என்பது என்னுதலிற்றோ எனின், மேற்கூறப்பட்ட எச்சம் இரண்டு வகைப்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: சொல்லே குறிப்பே ஆயிரண்டு எச்சம் என்பது — சொல்லெச்சமும் குறிப்பெச்சமும் என இரண்டு எச்சம் ஆம் என்றவாறு.

சொல்லெச்சம் என்று சொல்லப்பட்ட வாய்பாடன்றிப் பிறவாய்பாட்டால் தோன்றினும் என்றவாறு.

எச்சம் என்பது ஒழிதல் என்றவாறு.

இறையனார்
அகப்பொருள்

[கற்பு

சொல்லெச்சத்திற்குச்
செய்யுள் :

‘பள்ளத்து நீலம் பறந்தலைக் கோடிப்பட் டார்குருதி
வெள்ளத்துச் செங்கழு நீர்வைத்த கோன்தொண்டி வண்டுமென்பூ
வள்ளத்துத் தேமகிழ் கானல்வந் தார்சென்ற தேர்வழியெம்
உள்ளத்தி னோடு சிதையவந் தூரும் ஒலிகடலே.’ (ந௨ச)

இனிக், குறிப்பெச்சம் வந்த செய்யுள் :

‘இடியார் முகிலுரு மேந்திய கோனிர ணேதயன்றன்
வடியா ரயிலன்ன கண்ணிதன் வாட்டம் உணர்ந்துவண்பூங்
கடியார் கருங்கழி மேய்கின்ற கானற் கலந்தகன்ற
கொடியா ரினுமிகத் தாமே கொடிய குருகினமே.’ (ந௨ரு)

எனவுங் கொள்க. (௨ரு)

# சூத்திரம் - ருசுல

முற்படக் கிளந்த பொருட்படைக் கெல்லாம்
எச்சம் ஆகி வரும்வழி அறிந்து
கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.

என்பது என்னுதலிற்றோ எனின், இந்நூலுள் எடுத்தோத்தே, இலேசே என்று இவற்றான் முடியாது நின்றனவெல்லாம் இது புறனடையாகத் தந்துரைக்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: முற்படக்கிளந்த பொருட் படைக்கு எல்லாம் என்பது — முன்னால் உரைக்கப்பட்ட சூத்திரத்துப் பொருட்கெல்லாம் என்றவாறு; எச்சம் ஆகிவரும் வழி அறிந்து என்பது — ஒழிவுபடவரூஉம் இடம் ஆராய்ந்து என்றவாறு; கிளந்த அல்ல வேறு பிற தோன்றினும் என்பது — சொல்லப் பட்ட வாய்பாடின்றிப் பிறவாய்பாடு தோன்றினும் என்றவாறு; கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே என்பது—அச் சொல்லப்பட்ட புத்து இலக்கணத்தானே உணர்ந்து உரைக்கப்

படும் என்றவாறு.

இது களவிடத்தொழிந்தது, கற்பிடத்தொழிந்தது என்று அறிந்து என்றவாறு.

தலைச் சூத்திரத்துள், 'அன்பினைந்திணை' என்றதல்லது அன்பு உணர்த்துமாறு ஆண்டு உணர்த்தியதில்லை, இதுவே ஒத்தாகத்தந்து உணர்ந்து அதன் விகற்பமெல்லாங் கொள்க.



அன்பினுனைய ஐந்திணைக்குரிய இறைச்சிப்பொருள் உணர்த்தியதில்லை ; அவை,

‘தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ.’ (அகத்திணையியல்-௨0)

ஐவகை நிலத்தின் ஓதப்பட்ட இடமும் காலமும் தெய்வமும் உணவும் மாவும் மரமும் புள்ளும் பறையும் செய்கையும் யாழும் ஆடூஉப்பெயரும் மகடூஉப்பெயரும் அவ்வவ் நிலத்துக்கு மக்களும் பூவும் நீரும் இருதுவும் என்றித் தொடக்கத்தனவும், ஐந்திணைக் குரியன உரிப்பொருளும், அவற்றின் நிமித்தமும், ஐந்திணைக் குரிய விகற்பமும் அவை எல்லாம் இதுவே ஒத்தாகத் தந்துரைக்க.

இனி, எண்வகை மணத்தின் விகற்பமும் இதுவே ஒத்தாகத் தந்துரைக்க.

இனிக், கந்தருவ வழக்கின் விகற்பமும் தந்துரைக்க.

இதுவே ஒத்தாகத்

இயற்கைப் புணர்ச்சிக் கண்ணும் விளையாட்டொக்கல் வேறிடம் படர இருவரும் தம்முள் தலைப்பெய்யுமாறு, புணரும் இடத்துத் தன்மையும், அது கன்மேற் பொதும்புபட்டுக் கோட்டுப்பூவும் கொடிப்பூவும் நிரந்து, நீர்த்துறைமேற் சித்திரப் படாம் விரித்தாலேபோன்று, வண்டும் தும்பியும் வரிக்கடைப் பிரசமும் யாழும் குழலும் முரன்று, கடற்றிரையும் கானியாறும் முழவும் துடியும் பாடியம்ப, இரவோரன்ன கொழு நிழற்றாய், நிலவோரன்ன வெண்மணலொழுகி, அகத்தார் புறத்தாரைக் காண்டல் எளிதாய்ப், புறத்தார் அகத்தாரைக் காண்டல் அரிதாய், வானேரும் விழைவைத்தவிர்த்தோரும் விரும்பும் பொழிலுள், இயற்கைப் புணர்ச்சியது இறுதிக்கண், தலைமகளை ஆற்றுவித்துப் பிரியும் பிரிவும் இதுவே ஒத்தாகத் தந்துரைக்க.

இனிப், பாங்கற்கூட்டத்துக்கண் தலைமகனது வேறுபாடு கண்டு பாங்கன் வினவத் தலைமகன் சொல்லினவும், அவை கேட்ட பாங்கன் கழறினவும், பாங்கற்கு எதிர்மறையாகச் சொல்லினவும், எதிர்ப்பட்ட தலைமகனது ஆற்றாமை கண்டு பாங்கன் தலைமகற்குக் கவன்றனவும், கவன்றபாங்கன் நின்னாற் காணப்பட்ட உரு எவ்விடத்து எத்தன்மைத்து என்னுமாறும், தலைமகன் இன்னவிடத்து இத்தன்மைத்து என்னாற் காணப் பட்ட உரு என்னுமாறும், அதுகேட்ட பாங்கன் அவ்விடத்து எதிர்நோக்கிச் செல்லுமாறும், அவ்விடம் புக்குப் பாங்கன் தலை

[கற்பு

மகளைக் கண்டு நின்று சொல்லினவும், பாங்கன் மீண்டுவந்து இடம் காட்டினவும் இதுவே ஒத்தாகத் தந்துரைக்க.

'அவ்வியல் பல்லது'
(இறையனார்-ஊ)

என்னுஞ் சூத்திரத்துவிகற்பம் இதுவே ஒத்தாகத் தந்துரைக்க.

தலைமகன் தோழியை
இரந்து குறையுறுமாறும்,
குறையுறாநின்றவழித்
தோழி கையுறை

மறுக்குமாறும்,

மதியுடம்படுக்குமாறும்,

படுத்தவழி இருவர்

குறிப்பும்பற்றிக் கூட்டமுண்மை உணரு

மாறும்,

உணர்ந்தாள் அது

நெஞ்சிற்குச் சொல்லுமாறும்,

பின்னைத் தோழி

தலைமகனது ஆற்றாமைக்குக்

குறை நேரு

மாறும்,

நேர்ந்தாள் தலைமகளைக்
குறைநயப்புக் கூறுமாறும்,

தமர் இற்செறித்தவழித்
அறத்தொடு நிற்குமாறும்,

தலைமகளது கற்பழிவு
நோக்கி

குறையுறுநின்ற தலைமகனைத் தலைமகளது
பெருமை கூறித் தோழி சேட்படுக்குமாறும்,

அருமை

தோழி அறத்தொடு
நிற்கும் விகற்பமும்,

இரவுக்குறி விகற்பமும்,

பகற்குறிக்கண்
தோழியும் தலைமகனும்
சொல்லும் விகற்
பமும்,

இரவுக்குறியிடத்து வா
என்று சொல்லும் விகற்பமும்,

இரவுக்குறி நிகழும்
இடம் இன்னஇடம் என்று

சொல்லும்

விகற்பமும்;

இரவுக்குறிக்கண்
அம்பலும் அலரும் ஆமுறை
இரண்டும் களவாமாறும்,

வெளிப்பட்டபின்றை
நிகழுஞ் சொல்லும்,
புணர்ந்துடன்
போக்கும்,

உடன்போக்கின்கண்

பின்செல்லுமாறும்,

பின்செல்ல
இடைச்சுரத்துக் கண்டார்
மையும்,

207

சொல்லும் வாய்

சொல்லும் முறை

கண்டார் இடைச்சுரத்துத்
மீட்குமாறும்,

தலைமகளது நிலைமையுரைத்து

தலைமகன்
மகிழ்ச்சியாமாறும்,

தலைமகன் பொருள் முதலாயினவற்றிற்கு வரைவிடை வைத்துப் பிரிந்தவழி, தலைமகளைத் தோழி ஆற்றுவிக்குமிடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவனவும்,

வரைவொடு புக்கவழித் தந்தையும் தன்னையன்மாரும்

மறுக்குமாறும்,

அவ்வழி நற்றாய்
அறத்தொடு நிற்குமாறும்,

கற்புக்காலத்துத்
தலைமகன் தலைமகளைப்

பிரியும் பிரி

வென்று சொல்லப்பட்ட

பிரிவும்,

பிரிந்தவிடத்துத்

தலைமகள் ஆற்றாளாகத் தோழி

வற்புறுத்

தனவும்,

பருவங்காட்டினவும்,

தலைமகன்

வினைமுற்றுவித்து வந்தவாறும்,

அஃதுணர்ந்த தோழி

சொல்லினவும்,

தலைமகன் வினைமுற்றினன் தேர்ப்பாகற்குச்
வும், முகிலுக்குச் சொல்லினவும்,

சொல்லின

தலைமகன்
தலைமகளுடனிருந்து தோழி
கேட்பச் சொல்

லினவும்,

மற்றும், பரத்தையிற் பிரிவின்கண் துனியும் புலவியூட்
லும் அவற்றது விகற்பமும்,

பரத்தையிற் பிரிந்த தலைமகற்குத் தலைமகள் வாயின்மறுத்
தனவும்,

வாயில்வேண்டிப் பாணன் முந்துறுத்தனவும்,

விருந்து முந்துறுத்தனவும்,

வாயில் பெற்றுப் புக்கனவும், மற்றும்
இதுவே ஒத்தாகத் தந்துரைக்க.

இறையனார் அகப்பொருள்

சூத்திரம் - ௬௰

களவு கற்பெனக்
கண்ணிய ஈண்டையோர்
உளநிகழ்
அன்பின் உயர்ச்சி மேன.

என்பது என்னுதலிற்றோ எனின், மேல்வகுத்த களவு கற்புக் கட்குப் பிரிதும் ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : களவு கற்பு எனக் கண்ணிய என்பது—களவென்றும் கற்பென்றும் புலவோரால் வகுத்துரைக்கப்பட்ட ஒழுக்கங்கள் என்றவாறு ; ஈண்டையோர் என்பது—இவ்வுலகத்திற் பிறந்தானும் சஞ்சரித்தானும் பொருந்துவோரது என்றவாறு ; உளம் நிகழ் அன்பின் உயர்ச்சிமேன என்பது—உயர் குலத் தலைவன் தலைவியென்று இன்னோரது உளத்தின்கண் நிகழ்கின்ற அன்பினது உயர்வின்கண்ணவாம் என்றவாறு.

தேவர்க்கும் நாகர்க்கும் இவ்வொழுக்கம் அவர் உலகத்தில் இல்லை என்பார், 'ஈண்டையோர்' என்றார். எனவே, அன்னோர்க்கு அஃது ஒரோர் காலத்து இவ்வுலகத்து நிகழும் என்றாராயிற்று : அஃது இவ்வுலகினும் இயற்கையான் நிலைபெறாது புலவரான், 'இல்லது இனியது நல்லது' என நாட்டப்பட்டதோர் ஒழுக்கம் என்பார், 'கண்ணிய' என்றார்.

இனி, இரட்டுறமொழிதலான், 'ஈண்டையோர்' என்பதை ஒருபெயராகக்கொள்ளாது; 'ஈண்டை ஓர்' எனக் கொண்டு,

'தானே யவளே தமியர்.' (இறையனார்-உ)

என்றதனால், தானே அவள், அவளே தான் என இயன்ற ஈருடலின் ஓருயிர் போல்வார் உளத்து என்று கொள்ளினும் அமையும். 'அன்பின் உயர்ச்சி' எனவே, அஃதில்லாவிடத்து இவ்வொழுக்கங்கள் நடைபெறா என்பதூஉம், அதனானே அஃது உயர்ந்தோர்மாட்டது என்பதூஉம், அவருள்ளும் அரசர்க்கே சிறந்தது என்பதூஉம் பெற்றாம். அற்றாயின், 'உயர்ந்தோர் மேன' எனப் பாடமோதலாகாதோ எனின்,

"அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர்.' (அகத்-உங)

என மற்றை வருணத்தோர்க்குஞ் சிறுபான்மை அஃது உரியது என்று தழீஇக்கோடல் கருதப்பட்டது என்க. (உஎ)

கற்பியல் முற்றும்

பக்கம்

அக இதழ் - உள்ளேடு 46
அக்கை - முன்பிறந்தாள் 102
அச்சம் - குறிப்பின்றியே தோன்றும் நடுக்கம் 147
,, தான் காணப்படாததோர் பொருள் கண்டவிடத்து அஞ்சுவது 84
அடிபுறை - காலடியில் வைத்துக் கண்டுகொள்வது: பாதகாணிக்கை 46
அட்டில் - சமையலறை 115
அணித்து - அடுத்துள்ளது ; பக்கத்திடம் 45
அணிமை - பக்கம் ; நெருங்கின இடம் 196
அத்தாணி - அரசிருக்கை 172
அந்திவான் - மாலைநேரத்து வானம் 70
அம்பல் - வெளியில் பரவாத வாறு பழிதூற்றல் 116
பெரும்போதாய்ச் சிறிது நிற்க அலரும் 117
அயர்வுயிர்ப்பு - வருத்தந் தீர்தல் 144
அயிர்ப்பு - ஐயம்; சந்தேகம் 117
அரவவண்டு - ஒலிசெய்கின்ற வண்டினம் 46
அரிமாநோக்கு - சிங்கத்தின் பார்வை 60
அருகும் - சார்த்தும் 82
அருங்கலம் - கிட்டுதற்கரிய அணிவகை 137
அருத்தம் - பொருள் 172
அருத்தாபுத்தி - அறுவகை அளவைகளுள் ஒன்று. (பகலுண்ணான் பருத்திருப்பது கண்டு அவன், இரவில் உண்பான் எனக் கருதுதல்)155
அலர்-வெளியிற்பரவிய பழிச்சொல் 116

பக்கம்

அலவன் - நண்டு 81
அவத்தம் - வீண் 88, 89
அவ்வளவு - அதுவரை 105
அழல் - வெப்பம் 120
அளகம் - கூந்தல் 44
அறத்தொடு நிற்றல் - சிறந்தவற்றைக் கூறுதல் 122
அறிவு - மெய்ம்மையை உணர்வது 83
அனுமித்து - அனுமானித்து ; உத்தேசித்து; கருதி 15
ஆகம் - மார்பு 44
ஆங்க - அசைச்சொல்; பொருள் தாராது இசைபட வருஞ்சொல் 48
ஆசாரம் - ஒழுக்கம்;இயல்பு 71
ஆபதம் - ஆபத்து;கெடுதல் 160
ஆயம் - தோழிப்பெண்கள் கூட்டம் 29, 59, 141
ஆரணங்கு - நிறைந்த அழகு 47
ஆரிடம்-எண்வகை மணத்தில் ஒன்று 25, 26
ஆரிருள் - மிக்க இருட்டு; நள்ளிருட்போது 110
ஆர்ப்பெடுத்து - ஆரவாரித்து; பெருங்குரல் இட்டு 8
ஆவிசென்றால் - உயிர்போனால் 55
ஆள்வினை - ஆட்சித்திறம் 160
ஆறலைத்தன-வழிப்பறிசெய்த பொருள்கள் 21
ஆறு - வழி 143
ஆற்றல் - வலிமை 160
இகத்தல்-இறத்தல்; கடத்தல் 114
இடம் தலைப்பாடு -இடத்திற் சந்தித்தல் 57
இடைச்சுரம் - பாலைநில வழியிடம் ; இது சொல்நிலை மாறிய இலக்கணப் போலி 125
இணைவிழைச்சு-இருவர் காமத்

# இறையனார் அகப்பொருள்

பக்கம்

கோதை - மாலை 46

கோள் - ஒரு பாட்டினகத்துப் பொருள்கொண்டு நிற்கும் நிலை 200

சந்தனச்சாந்து ஒசுதும் 111

சந்து - ஒற்றுமை; சமாதானம் 158

சமயத்தார் - மதவாதிகள் 11

சமவாயம் - கூட்டம் 30

சாக்காடு - சாவு; இறப்பு 9,154

சாத்தெறிதல் - வணிகர் கூட்டத்தைக் கொல்லுதல் 21

சிந்திக்கும் - எண்ணமிடுவான் 58

சிலாவட்டம் - வட்டக்கல் 46

பக்கம்

சிவப்பு - சினக்குறிப்பு 61

சிவல் - கவுதாரி 21

சொல்லகில்லேம் - சொல்ல மாட்டோம் 87

ஞமலி - நாய் 101

ஞாழல் - குங்கும மரம் 20

ஞான்று - நாள்; ஈண்டுப் பொழுது 43

தக்கின்று - தக்கதல்ல 50

தடற்றுள்வாள் - உறையில் உள்ள வாள் 15

தட்பம் - குளிர்ச்சி 11

தண்ணுமை - மத்தளம் 175

தமர் - சுற்றத்தார் 9, 26, 139

தருமம் - அறம் 173

தலைக்கீடு - போலிக்காரணம்; தொடக்கம் 15

தலைப்பெய்தல் - கூடியிருத்தல் 48

தலையளி - முதன்மையான அன்பு 118

## அருஞ்சொற்பொருள்



பக்கம்

நயப்பு - மகிழ்ச்சி 39

நாட்கோலம் - ஒவ்வொரு நாளும் தம்மை ஒப்பனை செய்துகொள்ளும் அழகிய தன்மை. 96

நாண் - பெண்டிர்க்கு இயல்பாக உள்ளதொரு தன்மை 34

நாற்றம் - நறுமணம் 11

நிச்சம் - எப்பொழுதும் 10

நிரப்பு - வறுமை; தரித்திரம் 10

நிலத்திரிபு - இடவேறுபாடு 178

நிலப்பூ - தரையிற்படர் செடி கொடிகளின் மலர்கள் 39

நிறுத்தல் - தழீஇக்கோடல் 85

நிறை - காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம் 33

பக்கம்

பரியம் - மணமகளுக்கு மண மகன் வீட்டார் தரும் பொருள் 140
பரியான் - வருந்ாதவன் 33
பரிவு - அன்பு 86
பல்லாண்டு - வாழ்த்து 46
பள்ளத்துவழி வெள்ளம்போல 49
பள்ளியம்பலம் - தூங்குமிடம் 115
பாசாண்டிகர்-வேதத்தைமுதன் மையாகக் கொள்ளாப் பிற சமயத்தவர்; நூல் வல்லோர் 10
பாந்தள் - பெரும்பாம்பு 147
பாவை - மக்கள் முதலிய உரு வம். (பொம்மை) 2
பிடி - பெண்யானை 152
பிண்டியலர் - அசோகமலர் 178
பிதிரர்-பிதிர்க்கள்; தென்புலத் தார். ('தென்புலத்தார் தெய் வம்' என்பது திருக்குறள்)
பிரசம் - வண்டு 205

பக்கம்.

## அருஞ்சொற்பொருள் அகரவரிசை 215

பக்கம்

எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம்

சொல்லதிகாரம்—சேனாவரையம்

பொருளதிகாரம்—முதற்பகுதி

அகத்திணை

இயல், புறத்திணை

நச்சினார்க்கினியம்

பொருளதிகாரம்—இரண்டாம் பகுதி

ரூ. 4 0

6 0

இயல்—

5 0

களவியல்,

கற்பியல், பொருளியல்—

நச்சினார்க்கினியம்

5 0

பொருளதிகாரம்—மூன்றும்

முழுவதும்

| | | |
|---|---|---|
| கலிக்கா | 8 | 12 |
| | 3 | 12 |
| | 2 | 8 |
| | 3 | 12 |
| | 0 | 8 |
| | 0 | 8 |